# கொலைமறுத்தல்





## உரைநடைத் தொகுப்பு

பேரூராதீன வெளியீடு

பேரூர், கோயமுத்தூர் - 641 010

10/2




உ
போற்றி ஓம் நமசிவாய

பேரூராதீனம்

தவத்திரு சாந்தலிங்க அடிகளார்

இயற்றியருளிய

# கொலைமறுத்தல்

## உரைநடைத் தொகுப்பு

முனைவர். சிவத்திரு. ர.வையாபுரியார்

மகளிர் அருள்நெறி மாநாடு நினைவு வெளியீடு
மார்கழி 9,10 (24,25.12.2004)
ஈரோடு

பேரூராதீனம்

பேரூர், கோயமுத்தூர் – 641 010

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | கொலை மறுத்தல் உரைநடை |
| ஆசிரியர் | : | முனைவர்.சிவத்திரு.ர.வையாபுரியார் |
| ஆண்டு | : | திருவள்ளுவராண்டு 2035 |
| பதிப்பு | : | 2004 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்புரிமை | : | சத்வித்தியா சன்மார்க்க சங்கம் |
| பதிப்பாசிரியர் | : | தவத்திரு மருதாசல அடிகளார் |
| தாள் | : | 13.7 கி.கி., வெள்ளைத்தாள் |
| அச்சு எழுத்து | : | 12 புள்ளி |
| அட்டை | : | டூப்ளக்சு அட்டை |
| பக்கங்கள் | : | 40 + பக்கங்கள் |
| அச்சிட்ட படிகள் | : | 1000 |
| வெளியிடுவோர் | : | சத்வித்தியா சன்மார்க்க சங்கம்<br>பேரூராதீனம், பேரூர்.<br>கோயமுத்தூர் - 641 010. |
| தொலைபேசி எண் | : | 0422 - 2607995 |
| மின்னஞ்சல் | : | omanbu@rediff.com |
| அச்சிட்டோர் | : | குமாரதேவர் பதிப்பகம்<br>பேரூராதீனம், பேரூர்.<br>கோயமுத்தூர் - 641 010. |
| விலை | : | ரூ. 15.00 |

10/2

போற்றி ஓம் நமசிவாய



தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே.

– திருமூலர்

போந்தெம் உயிர்க்கு உயிராம் துணையொத்த
சாந்தையர் தம் பதம் ஏந்து கருத்தே.

– சிதம்பர சுவாமிகள்

## பேரூராதீனம்

### பேரூர் சாந்தலிங்க அடிகளார் திருமடாலயம்

திருக்கயிலாயப் பரம்பரை மெய்கண்டார் சந்தானம்

கொடி வழி

**அகச் சந்தானக் கொடி வழி**

சீகண்ட பரமசிவன்

1). திருநந்தி தேவர்

2). சனற் குமாரர்

3). சத்திய ஞான தரிசனிகள்

4). பரஞ்சோதி முனிவர்.

**புறச் சந்தானக் கொடி வழி**

1). மெய்கண்ட தேவர்

2). அருணந்தி சிவாச்சாரியார்

3). மறைஞான சம்பந்தர்

4). உமாபதி சிவாச்சாரியார்

5. சிதம்பரம் மச்சு செட்டி அருணமச்சிவாயர்

6. சித்தர் சிவப்பிரகாசர்

8. நமச்சிவாய மூர்த்தி
(3) (திருவாடுதுறை ஆதீன நிறுவனர்)

7. காழிக்கங்கை மெய்கண்டார்
(இவர் மரபிலே வருவது)
(1). காஞ்சித் தொண்டை மண்டல ஆதீனம்.
(2). தருமபுர ஆதீனம்

9. பட்டீசுவரம் சிவப்பிரகாசர்
(4). (திருவண்ணாமலை துறையூர்ஆதீனநிறுவனர்)



10. மறைஞான தேசிகர்

11. அம்பலவாண தேசிகர்
(இவர் மரபிலே வருவது
திருவாவடுதுறை ஆதீனம்)

10/2




சாந்தலிங்க இராமசாமி அடிகளார்



முத்துவிழா நாயகர்

பேரூராதீனம் குருமுதல்வர்

கயிலைகுருமணி சீர்வளர்சீர் குருமகா சன்னிதானம்

சாந்தலிங்க இராமசாமி அடிகளார்

# பதிப்புரை

இன்றைக்குச் சற்றேறக் குறைய முன்னூற்று ஐம்பது ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த தவமுனிவர், தவத்திரு சாந்தலிங்க அடிகளார் திருமடத்தைத் தோற்றுவித்தருளிய குருமுதல்வர் நம் சாந்தலிங்கப்பெருமான் ஆவார். இப்பகுதியில் கொலைபுலை நிறைந்திருந்த காலம். நம் குருமுதல்வர் அவர்கள் கொலைபுலைநீத்து தவநெறியில் மக்களைச் செலுத்த முயன்றவர். அவர்கள் நான்கு நூல்களை நமக்குத் தந்துள்ளார்கள். அவை கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத உந்தியார் என்னும் நூல்களாகும். அவற்றுள் முதன்மையான இந்நூல் "கொல்லான் புலாலை மறுத்தானை எல்லா உயிரும் கைக்கூப்பித் தொழும்" என்னும் குறளுக்குக்கேற்ப கொலை மறுத்தலால் ஏற்படும் மேன்மையை நன்கு உணர்த்துகிறது தவத்திரு தண்டபாணி சாமிகள் குருமுதல்வருடைய நூல்களைப் பற்றிசொல்லும் பொழுது முக்தி வீட்டுக்கு நான்கு திருவாயில்கள் என்று கூறுகிறார். இந்நூல்கள் பல காலங்களில் பல பதிப்புகள் செய்யப்பட்டுள்ளன. கொலைமறுத்தல் நூல்கருத்தை எளிய முறையில் அனைவரும் அறிந்து கொள்ளும் வகையில் நம் கல்லூரி மேனாள் முதல்வர் முனைவர் சிவத்திரு ர.வையாபுரி ஐயா அவர்கள் உரைநடை வடிவில் எழுதி முன்னர் வெளியிடப்பட்டது. இப்பொழுது நாளும் நம்மை வழிநடத்தி பற்பல கல்வி நிறுவனங்களை உருவாக்கி செம்மையுற நடத்திச்செல்லும் நம் ஞானத்தந்தை கயிலை மாமுனிவர் சீர்வளர்சீர் சாந்தலிங்க இராமசாமி அடிகள் அவர்களின் முத்து விழாவினையொட்டி நடைபெறுகின்ற மகளிர் அருள்நெறி மாநாட்டில் மறுபதிப்பு வெளியிடப்பெறுகிறது. இந்நூல் வெளிவர பல்லாற்றானும் துணை நின்ற அனைவருக்கும் எனது வழிபடு கடவுளான செந்தில் கந்தனின் திருவருள் துணை நிற்க வேண்டும். சாந்தலிங்கப் பெருமான் இன்னருள் கிடைக்கவேண்டும் என வணங்குகிறேன்.

இப்படிக்கு
என்றும் இறையன்புடன்
ஆ.மரகதம்,
மகளிர் அருள் நெறிமாநாட்டுக் குழுவினர்.

இன்ப மாய தறாதிடை யோங்கவுந்

துன்ப மாயது தூரத்து ணீங்கவு

முன்ப ராபரன் மொய்குழ லோடணைந்(து)

அன்பி னீன்றவோ ரானையைப் போற்றுவாம்.

– கொலைமறுத்தல்.

மறைமுடி அதனில் விளங்கிடும் ஒளியே

மனிதரைப் போலவந்து எனது

சிறைதவிர்த்து ஆண்ட சிவப்பிரகாச

தேசிகன் தன்னைமற் றவன்றன்

நறைமலர் அடியைப் போற்றிடும் சாந்த

நாயகன் தன்னைமற் றவன்றன்

நிறையருள் பெற்ற பழனிமா முனியை

நெஞ்சினுள் இருத்தியே பணிவாம்.

– குமாரதேவர்.

எடுத்துளவெச் சமயிகளு முலகருஞ்சார்

ஓரவையி னிடையிற் றோன்றும்

உடுத்தனைச்சூழ் தரவிளங்கு மதியினுயர்

சைவரைவந் தொருவன் றாழ்ந்தீண்(டு)

அடுத்தபல வுயிர்த்தோற்றத் துயர்வுதாழ்

வருளுகென வவனைத் தேற்றித்

தடுத்தபுறச் சமயிகட்குத் தரமுறுத்தி

நிறுத்துகின்றார் தம்பா லூற்றம்.

– கொலைமறுத்தல்.

திருச்சிற்றம்பலம்

# அருள்மிகு சாந்தலிங்க அடிகளார் வரலாறு

பதினேழாம் நூற்றாண்டில் பேரூர்த் திருமடத்தின் ஆதிகுருமுதல்வராக விளங்கியவர் சாந்தலிங்கர். இவர் திருவண்ணாமலை துறையூர், துறைமங்கலம், திருமுதுகுன்றம், மயிலம் பொம்மையபாளையம், கும்பகோணம் பெரியமடம் முதலான திருமடங்களோடு நெருங்கிய தொடர்புடையவராக விளங்கியுள்ளார். வீரசைவர் அல்லாத சிதம்பரம் மௌனசாமிகளை வீரசைவராக்கிய பெருமைக்குரியவர்.

திருக்கயிலாயபரம்பரையில் சீரும், சிறப்பும் செல்வாக்கும் பெற்ற திருவாவடுதுறை ஆதீனநிறுவனர் பஞ்சாக்கரதேசிகர் அவர்களின் மாணாக்கராகவும், அவ்வாதீனத்தின் இரண்டாம் பட்டமாகவும் விளங்கித் திருவண்ணாமலை ஆதீனத்தை நிறுவிய துறையூர், சிவப்பிரகாசரைக் குருவாகப்பெற்றவர் சாந்தலிங்கர். எனவே, திருவாவடுதுறை ஆதீன மரபுவழியே சாந்தலிங்கர் மரபு தொடங்குகிறது. இத்தகு மரபுடைய சாந்தலிங்கரின் வரலாற்றை இனி அறியலாம்.

சங்க இலக்கிய காலத்திற்குப் பிறகு திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய அருளாளர்களின் பாடல்கள் மக்களிடையே சமய எழுச்சியை உருவாக்கின. மன்னர்களும், வள்ளல்களும் நால்வருக்குத் திருவுருவங்கள் அமைத்து வழிபாடு செய்து சமயப்பணியாற்றினர். அவர்களது கொள்கையாளர்கள் நால்வரது பெயர்களால் திருமடங்களை அமைத்தனர். தமிழகமெங்கும் பரவியிருந்த இத்திருமடங்கள் 12ஆம் நூற்றாண்டுவரை தமிழர்களின் சமயக்கோட்பாடுகளைப் பரப்பும் சமய நிறுவனங்களாக விளங்கின எனக்கல்வெட்டுகள் சான்றுபகர்கிறது[1].

இந்நிலையில் தமிழகத்தில் அயலவர்தாக்கம் நுழைந்தது. தமிழகத்தில் வடமொழி செல்வாக்குப் பெற்றது. பிறசமயங்களை வளர்க்கும் அமைப்புக்கள் தமிழகத்தில் தோன்றின. இச்சூழல் சிவநெறியாளர்களிடையே ஏக்கத்தை உருவாக்கியது. சைவ சித்தாந்த உண்மைகளைத் திருமுறை வழியில் விளக்குவதற்குரிய வழியினை அருளாளர்கள் மேற்கொண்டனர். அவ்வாறு தொடங்கப் பெற்ற மரபே 'கயிலாயமரபு' எனத் தோற்றம் பெற்றது. கயிலைநாதரே

1. நால்வர்களும் கல்வெட்களும் – கோவைக்கிழார்.

இம்மரபுக்கு முதல்வர் ஆவார். கயிலைநாதர் சைவசித்தாந்தச் செம்பொருளைத் தனது மாணாக்கராகிய நந்தியெம்பெருமானுக்கு அருளிச் செய்கிறார். அவ்வுண்மையினை நந்தியெம்பெருமான் தனது மாணாக்கர் சனற்குமார முனிவர் ஆதியர்க்கு அருளிச் செய்தார். சனற்குமாரர் தமது முதல் மாணவராக விளங்கிய சத்திய ஞானதரிசினிகளுக்குச் செம்பொருளை அருளிச்செய்தார். அவர் அச்செம்பொருளின் நுட்பத்தைப் பரஞ்சோதி முனிவருக்கு அருளினார். இம்மரபு 'திருக்கயிலை அகச்சந்தான மரபு' எனப் போற்றப் பெறுகிறது.

இதனைத் தொடர்ந்து உருவாகிய புறச்சந்தான மரபில் முதலில் தோன்றியவர் 'மெய்கண்டார்'. இவர் நடுநாட்டில் உள்ள பாடல்பெற்ற தலமாதிய 'திருப்பெண்ணாகடம்' எனும் தலத்தில் அச்சுதக்களப்பாளருக்குச் சைவவேளாளர் மரபில் தோன்றியவர். இவரது இளமைப் பெயர் 'திருவெண்காட்டு நம்பி' என்பதாகும்.

"அச்சுதக்களப்பாளர் தமக்கு மகப்பேறின்மையைத் தமது குலகுருவாகிய சகலாகமபண்டிதரிடம் முறையிட்டார். அவரது திருவுளக்குறிப்பால் திருமுறைச் சுவடியில் கயிறு சார்த்திப் பார்த்தார். அந்நிலையில் 'பேயடையாப் பிரிவெய்தும் பிள்ளையினோடு உள்ள நினைவு' என்று தொடங்கும் திருமுறைப்பாடல் எதிர்ப்பட்டது.

இதுகண்டு மனமகிழ்ந்த சகலாகமபண்டிதர் அச்சுதக் களப்பாளரை நோக்கி, 'நீவீர் திருவெண்காடு சென்று, அங்குள்ள முக்குளத்தில் நீராடி, இறைவனை வழிபட்டால் மகப்பேறு கிட்டும்' என்கிறார். இவ்வாறாக இறைவன் திருவருளால் தோன்றிய திருவெண்காட்டு நம்பி, சிறுதேர் உருட்டி விளையாடிய நிலையில் வான்வழி வந்த பரஞ்சோதியார் உண்மைப் பொருளை அகத்தால் இனிது நோக்கி நம்பிக்கு அருளினார். அன்று முதல் திருவெண்காட்டு நம்பி 'மெய்கண்டார்' ஆனார். இவரது தத்துவஞானத்தையுணர்ந்த அச்சுதக்களப்பாளரின் குலகுரு சகலாகமபண்டிதர் தமக்கு மெய்ப்பொருள் உணர்த்த வேண்டிக் கொண்டார். மெய்கண்டாரும் அவரது விருப்பத்திற்கேற்ப மெய்ப்பொருளை உணர்த்தினார். இவரே அருணந்தி சிவாச்சாரியார் ஆவார். மெய்கண்டார் 'சிவஞானபோதம்' என்ற நூலை அருளினார். அந்நூற்பொருளை எளிமைப்படுத்தி அருணந்தியார் 'சிவஞான சித்தியார்' என்ற நூலையருளினார். இவரின் மாணாக்கர் 'மறைஞானசம்பந்தர்'. இம்மறைஞானசம்பந்தரின் அருள் மாணாக்கர்

'கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியார்'. இவர் மெய்க்கண்ட சாத்திரங்களுள் எட்டு நூல்களை (சித்தாந்த அட்டகம்) அருளிய பெருமைக்குரியவர்.

இவர்வழிவந்த அருள்நமசிவாயரின் மாணாக்கரே திருவாவடுதுறை ஆதீனத்தை நிறுவிய நமசிவாயமூர்த்திகள் எனப்படும் 'பஞ்சாக்கர தேசிகர்'. இவ்வாதீனத்தின் இரண்டாம் பட்டமாக விளங்கியவர் 'ஆதிசிவப்பிரகாசர்'. தில்லையில் ஆடல்வல்லானுக்கு வைணவ நெறியாளர்களால் ஏற்பட்ட வழிபாட்டுச் சிக்கல்களை நீக்கும் பொருட்டு தில்லைவாழந்தணர் திருவாவடுதுறைக் குருமுதல்வரிடம் வேண்டினர். சிவப்பிரகாசர் நமசிவாயமூர்த்திகள் ஆணையை ஏற்றார், தில்லை சென்றார். திருமால் நெறியினரிடம் தக்காங்கு எடுத்துக் கூறினார். அவர்கள் மறுத்தனர். ஆடல்வல்லான் திருவுளப்படி வேலூரில் இருந்த நாயக்கமன்னரது அமைச்சராகிய, இலிங்கண்ணன் என்பவரை அணுகினால் ஆடல் வல்லான் வழிபாட்டிற்கு உள்ள சிக்கல் தவிர்க்கலாம் என்பதறிந்து வேலூர் சென்று தமது வருகையைத் தெரிவித்து தமது வழிபாடுகளை முடித்து, தமது வழிபடும் திருவுருவாகிய சிவலிங்கத்தை முடியில் அணிந்து அமைச்சரைக் காணச் சென்றார். அமைச்சர் இவரது தவப்பொலிவையும் அருள்தோற்றத்தையும் கண்டு பேரன்புடன் வணங்கி வழிபட்டான். தில்லையில் கூத்தப்பெருமான் நாள் வழிபாடு நடத்தத் தடைபடுத்திய செய்தியைத் தெரிவித்தார். அமைச்சர் சிவநெறியாளர் ஒருவரை நியமித்து முறையாக வழிபாடுகள் நடக்க ஆவனசெய்தான். அதுமுதல் சிவப்பிரகாசர் குருவருளாலும் திருவருளாலும், 'வீரசைவ' நெறியில் நின்றார். இவரே, தமிழகத்தில் வீரசைவ ஆதீனத்தைச் சைவசித்தாந்தமரபில் தோற்றுவித்த பெருமைக்குரியவராவர். நாயக்க மன்னன் அமைச்சராகிய இலிங்கண்ணனின் பணியால் திருவண்ணாமலையிலும், இலிங்கதுரை என்னும் குறுநில மன்னரால் துறையூரிலும் வீரசைவ ஆதீனத்தை நிறுவி, மக்களிடையே சமய உண்மைகளைப் பரப்பி வந்தார்.

திருவண்ணாமலையிலும், துறையூரிலும் சிவப்பிரகாசர் ஆதீனத்தலைவராகப் பொறுப்பேற்றுச் சமயப்பணியாற்றி வந்தார். 'தொண்டைநாடு சான்றோருடைத்து' என்ற பெருமைக்கேற்ப அந்நாட்டைச் சார்ந்தவராகக் கருதப்படும் சாந்தலிங்கர், இளமையிலிருந்தே சமய ஒழுகலாறுகளை மேற்கொண்டு குருவை நாடியிருந்தார். அக்காலத்தில் சிவப்பிரகாசரது தவவலிமையும், அருட்பொலிவும்

சீலத்தவரால் போற்றுவதைக் கேள்வியுற்றுத் திருவண்ணாமலைத் திருமடத்தை அணுகி, குருநாதரை வணங்கி, திருவுளக்குறிப்பறிந்து மகிழ்ந்தார். அவரைச் சிவமாகவே கண்டு வியந்தார். சிவப்பிரகாசர், சாந்தலிங்கரது நிலையுணர்ந்து 'வீரசைவ தீக்கை' அளித்துத் தமக்கு அணுக்கராக ஏற்றுக் கொண்டார். அன்று முதல் தமது குருநர்தராகிய ஆதிசிவப்பிரகாசரிடம் உடனிருந்து திருவண்ணாமலை நாதரைத் தொழுது சாந்தலிங்கர் பணிசெய்தார்.

அக்காலத்தில், காஞ்சிபுரத்தில் தொண்டைமண்டல வேளாளர்கட்குக் குலகுருவாக விளங்கியவர் குமாரசாமிதேசிகர். அண்ணாமலையாரை வழிபடும் சிந்தனையில் திருவண்ணாமலைக்குப் பயணம் மேற்கொண்டார். வழியில் இடையிடையே சிவத்தலங்களில் தங்கி வழிபாடு மேற்கொண்டார். அந்நிலையில் அவரது பூசைப் பெட்டகத்தை மறதியால் முந்தைய இடத்தில் அணுக்கர்கள் விட்டுவந்ததால் நாட்பூசை செய்ய இயலாமல் வருந்தினார். அதைக் கேள்வியுற்ற வீரசைவர்கள் 'நீர் சிவலிங்கத்தைத் தனித்து வைத்ததனால் வந்த இடர்இது. ஆகவே அதனை அங்கலிங்கமாகத் தரித்துக் கொள்க' என்று கூறினர். இறைவனும் அவ்வாறே செய்க என ஆணை வழங்கினர். குமாரசாமிதேசிகர் நாடுபோற்றும் ஆதிசிவப்பிரகாசரை வணங்கி, குருதேவரிடம் வீரசைவதீட்கை பெற்று அவரின் அருள்மாணாக்கரானார்.

வீரசைவ ஆதீன முதல்வராக விளங்கித் தம்மை ஆட்கொண்ட சிவப்பிரகாசரின் பெயரைத் தமது மூத்த மகனுக்குச் சூட்டினார். அவரே, 'கற்பனைக் களஞ்சியம், துறைமங்கலம் சிவப்பிரகாசர் ஆவார். இவரது உடன்பிறப்புக்களாக வேலையர், கருணைப்பிரகாசர், ஞானாம்பிகை என மூவரும் விளங்கினர். அனைவரும் குருநாதரிடம் தீக்கைபெற்று அருள் மாணாக்கரானார்கள்.

பின்னர் கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாசரது குடும்பம் திருவண்ணாமலையில் சில காலம் தங்கியது. அங்கு சாந்தலிங்கரும், கற்பனைக்களஞ்சியம் சிவப்பிரகாசரும் இணைபிரியா நண்பர்களாயினர். இத்தகு சிவப்பிரகாசர் கலைவளம் மிக்க செந்நாவினராக முப்பதுக்கும் மேற்பட்ட நூல்களை அருளினார். அவை வீரசைவக் கொள்கைகளையும், தத்துவக் கொள்கைகளையும் விளக்கும் வகையில் விளங்குகின்றன.

சாந்தலிங்கர் தமது குருமுதல்வருக்கு வழிபடு கடவுளான தில்லைப்பெருமானையே தமக்கும் குலதெய்வமாகக் கொண்டு கொற்றவன்குடித் திருமடத்தில் தமது குருநாதருடன் அணுக்கராக இருந்து தமது குருவாக விளங்குபவர் தில்லைக்கூத்தனே என்பதை

"கண்டென் களிகூர்ந்து சிவப்பிரகாச நாமம்
கொண்டோங்கு உருவோடு இவண்உற்றெனை ஆண்டகோவே,
பண்டேயொரு நீ வகுத்திட்ட படிக்குயானுன்
தொண்டாகி வந்தின்றுனைப் பாடத் தொடங்கினேனே"

எனவும்

"தில்லைப்பதிமேய சிவப்பிரகாசனேயோ
தொல்லைப்பிறவா நெறிமேவிய தோன்றலேயோ
அல்லல் பிறவிக்கு இளைத்தேன்தனை அஞ்சலென்றோர்
சொல்லைப் பகராய் விடைமீதினம் தோன்றி நின்றே"

எனவும் போற்றினார். தில்லைப்பெருமானைப் புகழ்ந்து தமது 'வைராக்கிய சதகத்தில்' பல பாடல்களைப் பாடிமகிழ்ந்தார்.

தமது குருவிடம் வாதிட்டுத் தோல்வியுற்று மாணவரான மத்துவ நெறியினரான 'தூளிதம் காளத்திநாதன்' என்பவரின் அருட்பொலிவினால் ஈர்க்கப் பெற்ற சாந்தலிங்கர் தமது வழிகாட்டும் ஆசிரியராக ஏற்றுக் கொண்டார் என்பதைக்

"காணாத பவக்கடலின் கரைகாண எற்குத்
கோள்நாகணி மார்ப மெய்யன்பு கொடுத்தியன்றே
நாணார்திசைத் தேன் திருக்காளத்தி நாத உன்தாள்
பேணாது அவலக்கடல் மூழ்கிய பேதையேனே"

என வைராக்கிய சதகத்தில் அருளியுள்ளார்.

துறையூர் சிவப்பிரகாசர் ஆந்திர, கன்னடநாட்டிலுள்ள திருத்தலங்களுக்கு வழிபாட்டுப் பயணம் மேற்கொண்டார். அவருடன் சாந்தலிங்கரும் பயணமானார். ஆந்திரத்தில் நந்திமலையில் சாந்தலிங்கரின் மரபைக்கூறும் திருமடம் உள்ளதால் இது அறியலாகிறது. இத்தலவழிபாட்டுப் பயணத்திற்குப் பின் சிவப்பிரகாசருடன் துறையூரில் சாந்தலிங்கரும், சிலகாலம் தங்கி வழிபாடு செய்தார். அதனால் இவரை, 'துறையூர் சாந்தலிங்கர்' என அழைத்ததாக வரலாறு கூறுகிறது.

துறையூரிலிருந்து ஆதிசிவப்பிரகாசரும், சாந்தலிங்கரும் மீண்டும் திருவண்ணாமலைக்கு எழுந்தருளினர். துறையூர் சிவப்பிரகாசர் அத்துவிதவெண்பா ஆதிய பல நூல்களை இயற்றியுள்ளார். சிவப்பிரகாசருக்கு மேற்குத்தல வழிபாடு செய்யும் விருப்பம் மலர்ந்தது. இருவரும் மேற்குத்தலப் பயணம் மேற்கொண்டனர். அப்பயணத்தில் கொங்குநாட்டிலுள்ள திருச்செங்கோட்டு இறைவனை வழிபட்டுத் தங்கினார்.

இத்தலப்பயண வரலாற்றில் ஆதிசிவப்பிரகாசரிடம் அழுக்காறு கொண்ட வேதியர்களின் செருக்கினை அழிப்பதன் பொருட்டுக் கல்நந்தியைக் கடலையை உண்ணச் செய்தார். இதற்கு அகச்சான்றாக,

**"வில்லா மணிச்சபையின் வித்தகா கூடலின்முன்**
**கல்லானைக்கு இக்குஅருத்திக் காட்டியவுன்—வல்லாண்மை**
**கட்டுரையே ஆகிலிந்தக் கல்வேறு எழீஇக் கடலை**
**இட்டஇவர் முன்தினச் செய்யே"** என்ற வெண்பாத் திகழ்கிறது.

இருவரும் அங்கிருந்து புறப்பட்டு 'மீகொங்கில் அணிகாஞ்சிவாய்ப் பேரூர்' இறைவனை வழிபட்டனர். இங்கு நின்றாடும் கூத்தப்பிரான் அருட்பொலிவு சாந்தலிங்கரை மிகவும் ஈர்த்தது. இத்தலப்பயண வழிபாட்டிற்குப்பிறகு இருவரும் திருவண்ணாமலையை அடைந்தனர்.

சிவப்பிரகாசர், சாந்தலிங்கரின் பழுத்த தவநிறைவினை உணர்ந்தார். "சாந்தலிங்கரிடம் நீர் முதிர்ந்த தவநிலை பெற்றுள்ளீர், மக்களுக்கு வழிகாட்டுவதுடன், மாணாக்கருக்குத் தெளிவையும், ஞானவுணர்வையும் உருவாக்கும் வகையில் நீர் விரும்பும் இடத்திற்குச் சென்று வழிகாட்டுதலே சிவநெறிக்குச் செய்யும் பெருந்தொண்டாகும், ஆதலின் நும்சிந்தனையில் இடம்பெறும் திருத்தலத்திற்குச் செல்வீராக" என்று ஆணைவழி நெறிப்படுத்தினார். குருநாதரின் ஆணைவழி புறப்பட்ட சாந்தலிங்கர், உழவுத் தொழிலால் வளம்பெற்ற கொங்குநாட்டில் உள்ளதும், தமது மனதினை ஈர்த்துமாகிய பிறவாநெறித்தலமாகிய பேரூரை நோக்கிப் புறப்பட்டார்.

வரும்வழியில் சுந்தரரால் முதலைவாய்ப்பிள்ளையை மீட்ட திருப்பதிகம் பெற்ற அவிநாசித் திருத்தலத்தில் சில காலம் தங்கி அவிநாசியப்பரை வழிபட்டார். இதனை, தமது வைராக்கியசதகப் பாடலில்

"கொள்ளேனெனினும் எழுத்தைந்தும் உள்கோது யாதும்

தள்ளேனெனினும் உனைச்சார்தவம் சார்ந்திலாரை

விள்ளேனெனினும் எனைநீ கைவிடேல் காண்

நள்ளாறுடையாய் அவிநாசி நயந்துளானே" என்றும் குறிப்பிட்டுள்ளார்.

அவிநாசியப்பரை வழிபட்டு சில காலம் தங்கியிருந்தபின் 'பிறவாநெறித்தலம் ஆகிய பேரூருரை' அடைந்து அங்குள்ள அரசவனத்தில் தன்னை மறந்தநிலையில் தவம் மேற்கொண்டார். அவரது அருட்பொலிவையும், தவஉணர்வையும் கண்ட சிவநெறியாளர்கள் தாமே அணுகி அணுக்கப் பணிசெய்துள்ளனர். பின் அவர் தங்குவதற்கு எனத் தனியே திருமடம் அமைத்துக் கொடுத்தனர். இந்நிகழ்வினைத் தண்டபாணி சுவாமிகள் அருளிய

"சாலக் கருணைதழைத்தகுரு தாள்பணிந்து

கூலப் பொலிவாரும் கொங்கு வளநாட்டினிடை

மேலச் சிதம்பரமாம் மிக்க புகழ்ப் பேரையினில்

சீலத்தர் போற்றத் திருமடம் செய்துற்றானே"

என்ற புலவர் புராணப் பாடலாலும் அறியலாம்.

சாந்தலிங்கரது அருள்தோற்றத்தையும், தவப்பொலிவையும் காண அடியவர் கூட்டம் நாளும் பெருகியது. பணியாளர்களின்றித் தொண்டர்களே பணிசெய்யும் பாங்கு வளர்ந்தது. இதனை,

"ஏறும் விடைபுரப்போன் ஏடுகை கொண்டே படிப்போன்

சோறு சமைப்போன் துகிற்பணி செய்வோன்–முதலாத்

தேறும் நிமித்தம் திருத்தொண்டு செய்பவராக்

கூறும் அடியார் குழாம் பலவும் கொண்டானே"

என்ற புலவர் புராணப் பாடலாலும் அறியலாம்.

இத்தகு சீடர் பரம்பரையைத் தோற்றுவித்த சாந்தலிங்கருக்கு மீண்டும் குருநாதரை வழிபடவும் மயிலம் முருகன் பேரருள் பெற்ற சித்தராகிய சிவஞானபாலையர் வழிவந்த இரண்டாம் பட்டம் அருட்குரவராக, பொம்மையபாளையம் திருமடத்தில் இருந்த சிவஞானபாலயரை வணங்கவும் சிந்தனை எழுந்தது. இத்தகு சிந்தையராகத் துறையூர்த் தலப்பயணமாகச் சென்று குருநாதரை வழிபட்டுச்சில காலம் அத்தலத்தே தங்கியிருந்தார்.

துறையூரிலிருந்து பொம்மபுரம் செல்லும் வழியில் துறைமங்கலத்தில் தங்கியிருந்த கற்பனைக்களஞ்சியம் சிவப்பிரகாசரைச் கண்டு, அளவளாவிச் சிலகாலம் உடன் தங்கினார். சிவப்பிரகாசரின் நாள் வழிபாட்டுக்கு வேண்டிய பணிகளை அவரது தங்கை ஞானாம்பிகையார் செய்து வந்தார். சாந்தலிங்கரும், சிவப்பிரகாசரும் மெய்ப்பொருள் பற்றி அருளும் உரைகளை அவ்வம்மையார் நாளும் கூர்ந்துநோக்கினார். இதைக் கண்ணுற்ற சாந்தலிங்கர் இந்நங்கை யார்? எனச் சிவப்பிரகாசரிடம் வினவினார். (என்து தங்கை) அவர் அங்கைக்கு உரியவர் ஆவார் என விடைகூறினார்.

இந்நிகழ்ச்சிக்குப் பின்னர் இருவரும் அடியவருடன் பலதலங்களை வழிபட்டுப் புதுவைக்கு அருகிலுள்ள பொம்மையபாளையம் புறப்பட்டனர். வழியில் சிவஞானபாலையதேசிகர் மீது அருட்பாக்களைப் பாடியருளுமாறு சாந்தலிங்கர் சிவப்பிரகாசரை வேண்டினார். அதற்குச் சிவப்பிரகாசர் கடவுளைத் தவிர மனிதரைப் பாடுவதில்லை என விடைகூறி மறுத்தார். இரவுநேரம் வந்துற்றதால் 'புத்துப்பட்டு' என்னும் ஊரில் ஐயனார் கோயில்வளாகத்தில் தங்கி, உறக்கம் மேற்கொண்டனர்.

சிவப்பிரகாசர் கனவில் முருகப்பெருமான் தோன்றி மலர்களைத் தட்டில் வைத்து இதனைத் தொடுத்து மாலையாக்கித்தருமாறு பணித்தார். இச்செய்தியை மறுநாட்காலை சாந்தலிங்கரிடம் சிவப்பிரகாசர் கூறினார். சாந்தலிங்கர் முருகனே, முருகனது பேரருள்பெற்ற சிவஞானபாலயரைப் பாட உணர்த்தியுள்ளார் என்று கூறினார். சிவப்பிரகாசர் சிவஞானபாலையசுவாமிகள் மீது நெஞ்சுவிடுதூது பாடி, சுவாமிகளை வழிபட்டுத் தங்கினார். இவர்களது வரலாற்றினையும், பயணச் சிறப்பினையும் அறிந்து இருவர்க்கும் சிவஞானபாலையசுவாமிகள் அருள்பாலித்தார். இவ்வாறு அருள்செய்த சிவஞானபாலையசுவாமிகள் 500 ஆண்டுகள் வாழ்ந்தவர் என வரலாறு கூறுகிறது. இவர் சிவப்பிரகாசரின் தங்கை ஞானாம்பிகை அம்மையாரைச் சாந்தலிங்கருக்குத் திருமணம் செய்து வைக்குமாறு அருளாணை வழங்கினார்.

ஞானாம்பிகையாருடன் சாந்தலிங்கர் பேரூர்க்கு எழுந்தருளி திருமடத்திலிருந்து அடியவர்களுக்கு நல்வழி காட்டிவந்தார். ஞானம்பிகையார் முதிர்ந்த அறிவோடு இல்லற நெறியில் நின்று அருட்பணிகளில் ஈடுபட்டார்.

சாந்தலிங்கர் செம்பொருள் அறியும் நெறியாளராக விளங்கினார். முத்தியைப் பெற விரும்பிய இல்லறத்தாரும், பற்றற்ற துறவியர்களும் சாந்தலிங்கரின் அருளைப்பெற நாளும் பெருகினர். ஞானாம்பிகையார் இல்லற நெறியில் நின்று நாளும் விருந்து பேணினர். புதிய அடியவராக, வீரசைவ அடியவர் ஒருவரை நாளும் உடனிருத்தி அமுது செய்வது சாந்தலிங்கரின் கொள்கையாகும். இக்கொள்கைக்கு ஏற்ப ஒருநாள் புதிய அடியவர் ஒருவரைத் தேடினர். பேசா நோன்பும், உறக்கமின்மையும் தமது விரதமாகக் கொண்ட மௌனசாமிகள் தில்லையிலிருந்து பேரூர்க்கு எழுந்தருளினார். புதிய அடியவராகிய அவரை அழைத்து வீரசைவ நெறிக்கு ஏற்ப அவரது சடைமுடியில் சிவலிங்கம் அணிவித்து, உடனிருத்தி, அமுதிட்டு மகிழ்ந்தனர். அன்று முதல் மௌனசாமிகள் 'வீரசைவரானார்'. தில்லையில் அவரது திருமடத்தில் வீரசைவநெறி பின்பற்றப்படுகிறது.

மெய்யியல் கருத்துக்களை அறிஞர்களிடையே பரவச்செய்ய வேண்டும் என்ற உள்ளக்குறிப்பால் நான்கு நூல்களை இயற்றியருளினார் என்பதை, முருகதாச அடிகள்

> "கூசல் அறக்கருணை கூட்டும் கொலைமறுப்பும்
> ஈசனது பத்திக்கு இனிதாம் சதகமும் பொய்ப்
> பாசம் முழுதும் பறித்தெறியும் தீபமும் நெஞ்சு
> ஊசல்நிகர் ஆட்டொழிக்கும் உந்தியுமாம் நூல்பெயரே"

என்றும் எடுத்துரைக்கிறார்கள்.

இந்நூல்கள் 'வீட்டுநெறியை விளக்கும் நூல்கள்' என்கிறார் தண்டபாணி சுவாமிகள். இதனை,

> 'நன்கு முத்தி வீட்டிலுறும் நான்கு பெரு வாயில்கள்
> எண்குணங்கள் போற்றிடும் நூல் ஈரிரண்டு செய்தானே' என்பதாலும்
> எம்மதத்தில் உள்ளவர்கள் எந்நிட்டை சொன்னாலும்
> சம்மதமேயாம் எமக்குத் தற்போதம் மாய்க்கில் எனப்
> பொய்ம்மதத்தோர் நாணப் புகன்றளும் அப்புனிதன்
> மும்மதமாப் போலும் முழுஞான வீரன்அம்மா" என்ற புலவர்புராணப்

பாடலடிகளாலும் நன்கு அறியலாம். மேலும், இவரது நூல்களை ஓதியுணர்ந்து சாந்தலிங்கரது மெய்ப்பொருள் உரையை நாளும் கேட்டு மகிழ்ந்தவர்களுள் சிலர், 'சாந்தலிங்கர் இல்வாழ்க்கையில் இருந்து கொண்டே துறவுநெறிக்கு விளக்கம்

தருகிறார்' என ஒருவருக்கொருவர் வினா எழுப்பினார். ஒருநாள், ஞானாம்பிகையாரை உடனிருத்திப் பாடம் சொன்னார். அவ்வேளையில் சாந்தலிங்கரும், ஞானாம்பிகையாரும், கயிலைநாதரும் உமையம்மையுமாக மாணாக்கருக்குக் காட்சியளித்தனர். இக்காட்சி கண்ட மாணாக்கர், தாழ்ந்து பிழைபொறுக்க வேண்டினர். இந்நிகழ்வினையடுத்துச் சாந்தலிங்கர் முழுத்துறவு பூண விரும்பினார். இதற்காக, இறைவனது திருக்குறிப்பை உணர எண்ணினார். அதன்படி, 'இன்று யாம் திருவமுது ஏற்கப் புறப்படுகிறோம். முதலில் பாலன்னம் கிடைக்குமானால் முழுத்துறவு நெறியில் நிற்போம்' என்கிறார். அவரது நினைப்புக்கு ஏற்பவே பாலன்னம் கிடைத்தது. தனது துணைவியாரைப் பாதுகாப்புக்குரிய இடத்தில் தங்கி இறைபணியும் செய்யுமாறு சாந்தலிங்கர் பணித்தார் ஞானாம்பிகையார் திருவண்ணாமலை சென்று பெரியமடத்தில் தங்கிச் சமயப்பணி ஆற்றிவந்தார். திருவண்ணாமலையில் இறையருள் பெற்றார். அந்த இடம் ஞானாம்பிகை பீடமாக திருமடத்தின் முகப்பில் பலருக்குக் குலதெய்வமாக விளங்குகிறது.

சாந்தலிங்கர் திருவமுது ஏற்கத் திருப்பேரூர் வீதியில் செல்லும்போது ஒரு சிறுவனை அன்பினால் நோக்கினார். உடன் அச்சிறுவன் பற்றுக்களைவிட்டுச் சாந்தலிங்கருக்கு அடியவனானான். ஆதலால், அன்று முதல் சாந்தலிங்கர் வீதியில் வரும்நிலையில் தாய்மார் தம்மக்களை மறைத்துவைத்துக் கொள்வர் என்ற செவிவழிச் செய்தியும் உண்டு.

சாந்தலிங்கர் அவிரோத நெறியில் நின்று பிறமதத்தாருடன் நட்புப் பாராட்டி வந்துள்ளார். இந்நிகழ்ச்சிக்கு அகச்சான்றாகப் பின்வரும் நிகழ்ச்சி அமைகிறது. கோவை மாநகரப் பகுதியில் வாழ்ந்துவந்த இசுலாமிய அன்பர்கள் சாந்தலிங்கரது மாணவர் ஒருவரிடம் அன்புகொண்டு அவருடன் நாள்தோறும் அருளுரைகேட்டுப் பழகி மகிழ்ந்தனர். அவர் திருவருட்பேறு எய்தும் நிலையில் இசுலாமிய அன்பர்கள் தாங்களே அவருக்குச் சமாதி அமைப்பதாக வேண்டினர். அவரும் 'நீங்கள் அமைக்கும் சமாதிக்கோயிலில், நமது சிவநெறிக்கு உரிய திருநீற்றை வைத்துப் பேணவேண்டும் என அருளினார். இதனைக் கேட்ட இசுலாமிய அன்பர்களும் அதனை ஏற்றனர்'. கோவை மாநகரின் பெரிய கடைவீதிப் பகுதியில் இச்சமாதி, 'கோரி' என்ற பெயரில் வழங்கி வருகிறது. அக்கோயிலில் மக்கள் அணிந்து

கொள்ளத் தெற்கு மாடத்தில் திருநீறு வைக்கப்பட்டுள்ளது. இன்றும் அக்கோயிலில் திருநீறுவைப்பது வழக்கமாக இருந்து வருகிறது.

சாந்தலிங்கரின் மெய்ப்பொருள் உண்மைகளை விளக்கும் வகையில், அவர் அருளிய கொலைமறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத உந்தியார் என நான்கு நூல்களும் விளங்குகின்றன. இந்நூல்களுக்குச் சாந்தலிங்கரின் மாணாக்கராகிய திருமுதுகுன்றம் குமாரதேவரின் மாணக்கர் திருப்போரூர் 'சிதம்பர அடிகள்' சிறந்த உரையினை எழுதியுள்ளார். இவ்வுரை மெய்ப்பொருளை விளக்கும் வகையில் திட்பமும், நுட்பமும் செறிந்து விளங்குகிறது.

சாந்தலிங்கரின் மாணாக்கராகிய குமாரதேவர் கன்னட அரசர். அரசு துறந்து துறவு பூண்டு சாந்தலிங்கர் நெறியில் நின்று வீரசைவக் கொள்கைகளை விளக்கும் வகையில் மகாராசா துறவு, சுத்தசாதகம், விஞ்ஞானசாரம், அத்துவித உண்மை, பிரமானுபூதி விளக்கம், ஞானவம்மானை, வேதாந்த தசகாரியக்கட்டளைச் சுருக்கம், வேதாந்த தசகாரியக்கட்டளை, சகசநிட்டை, உபதேச சித்தாந்தக்கட்டளை, பிரம சித்தியகவல், சிவதரிசன அகவல், ஆகம நெறியகவல், வேதநெறியகவல், பிரமானுபவ அகவல், சிவசமவாத அகவல் ஆகிய நூல்களை அருளியுள்ளார். போரூர் சிதம்பரசுவாமிகள், சந்நிதி முறை, பஞ்சாதிகார விளக்கம் ஆதிய நூல்களை அருளியுள்ளார்.

இறையருளோடு குருவருளும் பெற்று பல அடியார்களை உருவாக்கி வீரசைவ மரபை போற்றி வளர்த்த சாந்தலிங்கர் பேரூர் திருமடத்தில் நீண்டகாலம் மாணாக்கர்கட்கு நன்னெறிகாட்டி தவநிலையில் முதிர்ந்து ஒருமாசித் திங்கள் மகம் விண்மீன் கூடிய நிறைமதி நாளில் ஞானநிலை அடைந்து தாம் வழிபடும் கூத்தப்பெருமான் திருவடியில் கலந்தார். இச்செய்தியை புலவர் புராண ஆசிரியர்

**"ஆனந்த என்னும் அலைஇல்பெரும் சாகரத்தில்**
**ஈனந் தவிர்ந்தே இருந்துபல நாள்கழித்துத்**
**தானந்த மாதி தவிர்பதத் துற்றான்; அவன்றன்**
**ஊனந்த ஊருக் கொருகோயில் நல்கியதே"**

என்று குறிப்பிடுகிறார். இவர் பேரூருக்கு வந்து சமாதிக் கோயிலில் வழிபாடாற்றி, பதிகப்பாடல்கள் அருளியுள்ளார்.

சாந்தலிங்கரின் சமாதித் திருக்கோயில் முற்காலத்திலேயே கற்கோயிலாகப் பேரூரில் சிறந்து விளங்குகின்றது. இத்திருக்கோயிலும் இதைச் சார்ந்த திருமடமும் ஞானப்பயிர் வளர்க்கும் பண்ணையாக இன்றும் திகழ்ந்து வருகின்றன. சாந்தலிங்க அடிகளாரின் குருவழிபாடு திங்கள்தோறும் மகநாளில் சிறப்பாக நடைபெற்று வருகின்றது. இங்கு மாசித் திங்களில் நடைபெறும் குருபூசைவழிபாடு கொங்குநாடு முழுதும் புகழ்பெற்ற ஒன்றாக விளங்கி வருகின்றது. சிரவையாதீனம், இரண்டாவது குருமுதல்வர் தவத்திரு கந்தசாமி அடிகள் அவர்கள் சாந்தலிங்கர் பதிகமும், பிள்ளைத்தமிழும் பாடியுள்ளார்.

கறைதோய் பாவம் அறச்சீவகருணை பெருக்கும் கொலைமறுத்தல்,
காளகண்டன் தாளஅகண்டக் கண்கூட்டிடல் ஆம்மெய்ப் பத்தித்
துறைதோய் வைராக்கிய சதகம், சொற்றுத் துதிப்பார் மனம் உருக்கும்
துதிப்பாஇனங்கள் உளப்பாசம் துமிக்கும் வைராக்கியதீபம்
நிறைதோய் பரமா னந்த அருள் நிலையங்காட்டிப் புலத்தில் உந்து
நெஞ்சக்கவியைக் கட்டிஇன்ப நிட்டைகூட்டும் உந்திஎனும்
முறை தோய்நூல்செய் நின்கனிவாய் முத்தம் தருக முத்தமே
முதிர்சீர்ச் சாந்த லிங்கஅருள் முத்தா முத்தம் தருகவே.

காரணனை மால்விடையிற் கண்டவிதம் நீயுரைத்தும்
பேரறிவே நானெனுஞ்சொற் பேசிவம்பில் மாய்வேனோ?
வீரசைவ சித்தாந்த மெய்யடியார் மிக்குவந்து
சாரவல்ல பேரைநகர்ச் சாந்தலிங்க தேசிகனே.

— வண்ணச்சரபம் அருள்மிகு முருகதாச அடிகள்

சாந்தலிங்கர் பூசனையிற் சந்தமும் செந்தமிழால்
வாய்ந்தவழி பாடுசெயும் மாண்பினது —தோய்ந்தபட்டிப்
பெம்மான்தன் கோயிலினும் பேணிச் செயும் சிறப்பு
எம்மாட்டும் ஏற்றமுற்ற தீண்டு.

— தவத்திரு சுந்தரம் அடிகள்

# தவத்திரு சாந்தலிங்க அடிகளார் அருளிய
# கொலை மறுத்தல்
## [உரைநடை]

### காப்புச் செய்யுள்

"இன்பமாய தறாதிடை யோங்கவும்
துன்பமாயது தூரத்துள் நீங்கவும்
முன்பராபரன் மொய்குழலோ டணைந்து
அன்பின் ஈன்ற ஒரானையைப் போற்றுவாம்"

எண்ணிய இன்பங்கள் எண்ணியாங்கு மேன்மேலும் உண்டாகவும் துன்பங்கள் மனோவாக்குக் காயங்களில் தோன்றாமல் நீங்கவும் பரமசிவன் பராசக்தியுடன் கூடிப்பெற்ற மூத்தபிள்ளையாராகிய யானையைத் துதிப்போம்.

**பாயிரம்**

அயன், அரி, உருத்திரன், மகேசன், சதாசிவன் என்னும் ஐந்தொழிலாற்றும் கடவுளராய் இவ் ஐவரையும் கடந்து எங்கும் நிறைந்தவனுமாய் உரை மனம் கடந்தவனுமாய் நிற்கும் பரமசிவம் தனது கருணையினாலே குருவடிவாய் எழுந்தருளி வந்து ஒன்றுக்கும் பற்றாத எளியேனும் பிறவிக் கடலை நீந்துதற்குத் தெப்பமாகத் தந்த திருவடியினைத் தலைமேல்கொண்டு அவ்வருளினாலே இந்நூலைச் செய்கின்றேன். இதற்கு வேத ஆகமங்களே முதல் நூல். அவற்றின் சொற்பொருள்களைக் கொண்டு இதனைச் செய்துள்ளேன். இதற்குக் கொலை மறுத்தல் என்பது பெயர். இதில் சொல்லப்படும் பொருள் கொல்லாமை. நரகத்திற்கு அஞ்சினோர் இந்நூலைக் கேட்கத் தக்கோர். இதன் பயன் அறஞ்சார்தல்.

இந்நூலின்கண் எனது அறிவின்மையால் எழுத்து, சொல், யாப்பு, அணிக் குற்றங்கள் பொருத்தினும் பொருள் எவ்வகையிலும் கொல்லாமையைச் சாதிப்பதாய் இருத்தலின் பெரியோர் இதனை இகழாமற் கைக்கொள்வர்.

## நூற்பொருள் நிகழும் முறை

ஒரு பேரவையின்கண்ணே வேத ஆகமங்களை உடன்படுகின்ற அகச்சமயிகளும் அவற்றை உடன்படாத புறச்சமயிகளும் மற்றும் உலகியல் வாதிகளும் கூடியிருக்கின்றனர். இவர்களின் நடுவே யாவர்க்கும் தலைமையுடையராய் சைவாசாரியர் வீற்றிருக்கின்றார்.

அவர் தலைமை விண்மீன்களுக்கு நடுவே ஒளி வீசித் திகழும் முழுமதி போல் உள்ளது. அவ்வவையில் உள்ள பக்குவமுடைய மாணவன் ஒருவன் எழுந்து சைவாசிரியரைக் கை கூப்பி வணங்கிநின்று 'இவ்வுலகத்துயிர்களெல்லாம் சமமானவையோ? ஏற்றத்தாழ்வு உடையனவோ?' என வினவுகிறான். அவனுக்குச் சைவாசிரியர், உயிர்களிடையேயுள்ள ஏற்றத்தாழ்வுகளையும் அவற்றிற்குரிய காரணத்தையும் விளக்குகின்றார். அவ்வவையில் இருந்த பல சமயவாதிகளும் சைவாசி ரியர் கூறுவனவற்றைத் தடுத்துத் தத்தம் கொள்கையைக் கூறி வினவுகின்றனர். அவ்வவர் வினாவிற்கு நூன்முறையாலும் உலகியல் முறையாலும் தக்க எடுத்துக்காட்டுக்களுடன் விடை கூறிப் பலதரப்பட்ட பக்குவமுடையாரும் ஒருங்கே ஒத்துக்கொள்ளுமாறு சைவாசாரியர் தம் கொள்கையை நிலை நாட்டுகின்றார். இம் முறையில் இந்நூற்பொருள் நிகழ்கிறது.

## நூல்

***மாணவன்:*** அடியேன் தேவரீர் திருவடிகட்கு வணக்கம் செய்து வினவுவது ஒன்றுண்டு. இவ்வுலகில் விளங்கும் பல வேறுபட்ட பிறப்புக்கள் எடுத்த உயிரினங்கள் ஒன்றுக்கு ஒன்று ஏற்றத் தாழ்வுடையனவாய் இருக்குமோ? சமமாய் இருக்குமோ? தெரிவித்தருள வேண்டும்.

***சைவாசிரியர்:*** மாணவனே இவ்வுலகில் தோன்றிய உயிரினங்கள் இயங்குவன, நிற்பன என இரண்டு வகையாய் உள்ளன. இயங்குவனவற்றுள் ஊர்வன, நீர்வாழ்வன, பறப்பன, நடப்பன எனப் பல வகையுள்ளன. நிற்பனவற்றுள்ளும் புல், செடி, கொடி, மரம் எனப் பலவகை உள்ளன. அவ்வுயிர்களெல்லாம் அறிவு வேறுபாட்டினாலே ஒன்றுக்கொன்று உயர்வு

தாழ்வு உடையனவே. நிற்பனவற்றைக் காட்டிலும் இயங்குவன உயர்வுடையன. இயங்குவனவற்றுள்ளும் பறவை, விலங்கு முதலியனவற்றைக் காட்டிலும் மனிதன் உயர்வுடையவன்.

*மாண:* உணவு, உறக்கம் ஏனை இன்பத் துன்ப உணர்வு எல்லாம் மனிதர்க்குள்ளன போலவே விலங்கு முதலியவற்றிடத்தும் காணப்படுதலின் மனிதன் உயர்ந்தவன் என்பது யாங்ஙனம்?

*சைவர் :* மனிதன் அறுசுவை வேறுபாடு அறிந்து உண்கிறான். இனிய இடம் அமைத்துத் துயில்கிறான். முறையறிந்து இன்பந் துய்க்கின்றான். துன்பம் வந்தவிடத்துத் தன் அறிவின் வலியால் ஓர் உபாயங்கண்டு போக்கிக் கொள்ளுகிறான். இவை விலங்கு முதலியவற்றிடத்தில் இல்லாமையால் மனிதன் உயர்ந்தவனே. மேலும், விலங்கு முதலியவற்றிடம் காணப்படாத நாணம் என்னும் குணம் மனிதனுக்கு இருப்பதால் அவன் உயர்ந்தவன் என்பதில் ஐயமில்லை. இங்ஙனம் உயர்வுடைய மனிதர் அனைவரும் சமமானவரல்லர். இவருள்ளும் உயர்ந்தோர் தாழ்ந்தோர் உளர்.

*மாண :* மனிதருள் உயர்ந்தோர் யார்? தாழ்ந்தோர் யார்?

*சைவர :* பிற உயிர்களை அருளின்றிக் கொன்று அவற்றின் ஊனைத் தின்று தன் ஊனை வளர்ப்போர் கீழோர். ஆன்மா நிலையானது. ஆதலால் ஒரு பிறவியிற் செய்த கொலைப்பாவம் பல பிறவிகளிலும் தொடர்ந்து துன்பம் தரும் என்றும் உடம்பு நிலையற்றது என்றும் இதனைக் காக்க நினைப்பது நீர்க்குமிழிக்குப் பூண் கட்ட நினைப்பதை யொக்கும் என்றும் இவ்வூனை வளர்க்கப் பிறிதொன்றன் ஊனை உண்ணலாகாது என்றும் உணர்ந்து அவ்வுணர்வினாலே பிறிதோருயிர் தனக்குத் தீங்கு நினையாமையேயன்றி அதற்கொரு தீங்கு வந்தவிடத்து அருளுடையராய் அதனைக் காக்க முற்படுவோர் மேலோர்.

(இவற்றைக் கேட்டுக் கொண்டிருந்த உலகாயதன் கூறத் தொடங்குகின்றான்.)

*உலகாயதன் :* உயிர்க்கொலை செய்வதனால் வரும் தாழ்வு யாது?

*சைவர :* உயிர்களுக்கு நன்மை செய்தல் புண்ணியத்திற்குக் காரணம்; தீமை செய்தல் பாவத்திற்குக் காரணம். தீமையுள் கொலைக்கு மேம்பட்டதும் இல்லை. நன்மையுள் கொல்லாமைக்கு மேம்பட்டதும் இல்லை. கொலையே

புண்ணியங்களுள் முதன்மையானது. யானை அடியுள் ஏனைய விலங்கினங்களின் அடிகள் அடங்குமாறு போல, கொல்லாமை என்னும் அறத்துள் எல்லா அறமும் அடங்கும். ஆதலின் அறிந்தோர் தீவினையாகிய ஒருருவிற்குக் கொலை தலைபோலும் என்று கூறுவர். எனவே கொலையால் பாவம் வரும் என அறிக.

***உலகா :*** கொலையால் வரும் பாவம் என்ன செய்யும்?

***சைவா :*** நெடுநாள் நீங்காமல் நின்று வருத்துகின்ற பெரிய துன்பத்தைச் செய்யும்.

***உலகா :*** உலகில் கொலை செய்வார் பலரைக் காண்கினறேன். கொலையால் துன்பம் வருவது உண்மையானால் அப்பொழுதே வர வேண்டுமே? அங்ஙனம் வரக் கண்டிலேனே?

***சைவா :*** வேளாண்மை செய்யும் ஒருவன் விதைத்ததன் பயனை அடுத்த நாளே துய்க்கின்றானா? விளைந்து முதிர்ந்து வரும் காலத்தளவும் இருந்தன்றோ துய்க்கின்றான். விளைந்தது உண்பதற்கேயன்றி மீண்டும் விளைப்பதற்கும் ஏதுவாகிறது. அதுபோலத்தான் தீவினைப் பயனும் விளைந்து முதிர்ந்து துய்ப்பதற்கு வர ஒரு கால எல்லையுண்டு. அக்கால எல்லையில் இப்பிறப்பிலும் துய்ப்பன். இப்பிறப்பில் துய்ப்புக்கு வராவிடின் நரகத்திற் சென்று துய்ப்பன். அதன் மிச்சத்தை மீண்டும் இந்தப் பூமியிற் பிறந்து துய்ப்பான். இது உறுதி.

***உலகா :*** இங்ஙனம் நீங்கள் சொல்வதற்கு ஏது என்னை?

***சைவா :*** ஒருவன் செய்த கொலைத் தீவினை மறுமைக்கண் வந்து நரகத் துன்பம் தருவதோடன்றி இம்மைக் கண்ணும் அதன் வேகத்தைக் காட்டும் என்று மறை கூறுவது இதற்கு ஏது. விடமுண்ட ஒருவனுக்கு அதன் விளைவாகிய உயிர் போவதன் முன் உடம்பில் நெடிவு தோன்றுதலும், தீயினாற்சூடுண்ட ஒருவனுக்கு அதன் விளைவாகிய புண்ணாதல் முன் எரிச்சல் தோன்றுதலும் நாம் அறிந்தன. சிவத்துரோகம், பிரம்மகத்தி முதலிய அதிபாதக, மாபாதகங்களைச் செய்தவர்கள் மறுமையில் நரகத் துன்பம் அடைவதற்குமுன் இம்மையில் பைத்தியம் முதலிய துன்பம் எய்துகின்றனர். இங்ஙனம் தீவினைக்கு இம்மையில் துன்பம் விளைவது கொண்டே நரகம் உண்டு என்பது துணியப்படும்.

***உலகா :*** தீவினை செய்தவன் இறந்துபோனால் அவனை நாம் எரித்து விடுகிறோம். அவன் மறுமைக்கண் நரகத் துன்பம் அடைவான் என்பது எங்ஙனம்?

***சைவா :*** இந்த உடம்பினின்றும் உயிர் பிரிந்தவுடன் அது செய்த புண்ணிய பாவப் பயன்களைத் துய்ப்பதற்கேற்ற உடம்பு அவ்வுயிர்க்குக் கொடுக்கப்படும். புண்ணியம் செய்த உயிர்க்குப் பூதசார உடம்பு கொடுக்கப்படும். பாவம் செய்த உயிர்க்கு யாதனா உடம்பு கொடுக்கப்படும். அவற்றோடு இயைந்து உயிர் துறக்க, நரகங்களைத் துய்க்கும்.

***உலகா :*** இந்த உடம்பு செய்த தீவினைப் பயனை இந்த உடம்புக்கன்றோ? தர வேண்டும். செய்த உடம்பு அழிந்து போக வேறோருடம்புக்குத் தருவர் என்பது எங்ஙனம் பொருந்தும்? ஒருவனுக்குத் தோன்றிய பசிக்குப் பிறனொருவனுக்கு உணவிடுவதால் பயன் என்னை? "குற்றஞ் செய்தவன் தப்பிப்போகக் குறுக்கே வந்தவனை வாய்மேலடித்தான்" என்னும் வேடிக்கை மொழி போலன்றோ இருக்கிறது உம் கொள்கை. இம்மையில் எடுத்த இந்த உடம்புக்கும் துறக்க நரகங்களில் எடுக்கும் பூதசார உடம்பு யாதனா உடம்புகளுக்கும் என்ன தொடர்பு உண்டு.

***சைவா :*** இந்தப் பூத உடம்பிலே கூடிநின்று நன்மை, தீமைகளைச் செய்தவனறிவே பூதசார உடம்பு யாதனா உடம்புகளிலும் பொருந்துகிறது. ஆதலின் தொடர்பு உண்டு என அறிக.

***உலகா :*** ஒருடம்பில் நின்ற அறிவு பிறிதோருடம்பிற் சென்று புகுமோ? ஒரு முதியவன் காளைப் பருவத்தை விரும்புகிறான். அப்பொழுது காளைப் பருவம் உடையான் ஒருவன் இறந்து போகிறான். முதியவன் அறிவு காளைப் பருவத்தானுடம்பிற் பொருந்தி அப்பருவத்திற்குரிய இன்பங்களைத் துய்க்க வேண்டுமே; உலகில் அங்ஙனம் நிகழ்வதில்லையே!

***சைவா :*** இல்லை என்பது எவ்வாறு? கூடுவிட்டுக்கூடுபாய்தல் எனும் சித்து வல்லவரும் இவ்வுலகில் உள்ளனர்.

***உலகா :*** கூடுவிட்டுக் கூடு பாய்தல் என்று சொல்வதெல்லாம் கற்பனையான கட்டுக்கதையே. அதைக் கண்டவரில்லை. நீர் சொல்வது அம்மி பறக்கக் கண்டேன் என்று சொல்வது போல் உள்ளது.

***சைவா :*** கூடுவிட்டுக் கூடு பாய்வாரை நீ நேரிற்காணாமையால் கட்டுக்கதை என்கிறாய். நீ அறிகின்ற முறையில் ஒரு காரணம் காட்டுகிறேன் நாம் உறங்கும்போது கனவில் இவ்வுடலை விட்டு வேறோருடலிற் புகுந்து எங்கும் உலவி,

மீள்கின்றோமே; இதை நீ நாளும் உணர்கின்றாயே. ஆதலின் இவ்வுடலில் இருக்கும் அறிவு பிறிதோருடம்பில் வினை காரணமாய்ச் சென்று புகும் என்பது கட்டுக் கதையன்று; உண்மை எனத் தெளிவாயாக.

***உலகா :*** கனவின்கண் வேறோருடம்பு வரும் என்பது பிழை. கனவாவது நனவிற் கண்ட கேட்ட நினைவே.

***சைவா :*** கனவில் தோன்றும் உடம்பு பறத்தல் முதலியன செய்யக் காண்கிறோம். இவ்வுடம்பிற்கு அத்தன்மைகள் இல்லை. ஆதலின் கனவில் வேறு உடம்பு வரும் என்பதே உண்மை.

***உலகா :*** கனவில் பறப்பது போலத் தோன்றுவது முதலியன கதைகளில் தேவதைகள் பறத்தல் முதலியவற்றைச் செய்கின்றவாகக் கேட்டிருந்த நினைவே. ஆகவே இதைக் காட்டிக் கனவில் வேறு உடம்பு வரும் எனல் பொருந்தாது.

***சைவா :*** கதைகளில் தேவதைகளுக்குப் பலமுகங்களும் பல கைகளும் இருப்பனவாகக் கேட்கிறோம். உன் கொள்கைப்படி நமக்கும் கனவில் பல முகங்களும் பல கைகளும் வரவேண்டும். அங்ஙனம் வருதலின்மையின் கனவில் வேறு உடம்பு வரும் என்பது அறிக.

***உலகா :*** நாம் நனவில் காணாத, கேட்காத தன்மைகள் நமக்குக் கனவில் வருகின்றன என்பதை உடம்படுகிறேன். அதற்காகக் கனவில் வேறு உடம்பு வரும் என்பதை உடம்படமாட்டேன். அங்ஙனம் வருவனவும் இவ்வுடம்பின் குணம் என்றே கொள்ளலாம். ஒருடம்பில் எப்படிச் சென்று புக முடியும்? ஒரு மணியின் இயல்பாகிய ஒளி பிறிதொரு மணியிற் சென்று புகுமோ?

***சைவா :*** ஒன்றின் குணம் பிறிதொன்றிற் புகாது என்பது உண்மை. அறிவு உடம்பின் குணமாயின் நீ கூறுவது பொருந்தும்.அறிவு இவ்வுடம்பிற் பொருந்தியிருக்கும் உயிரின் குணம் என்று அறிக.

***உலகா :*** மண், நீர், நெருப்பு, காற்று என்ற நான்கு பூதங்களே உள்ளன. இவற்றுள் காற்று அசையும் இயல்புடையமையின் மற்ற பூதங்கள் இதனுடன் கலக்கும் பொழுது உடம்பு தோன்றும். உடம்பில் என்பு, தோல் முதலியன மண்ணின் கூறு. இரத்தம் முதலியன நீரின் கூறு. வயிற்றுத் தீ முதலியன நெருப்பின் கூறு. மூச்சு முதலியன காற்றின் கூறு. வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு மூன்றும் சேர்ந்த பொழுது முன்பு

இல்லாத செந்நிறம் புதிதாய்த் தோன்றுவது போல இப்பூதங்கள் கூடினபொழுது முன்பு இல்லாத மனம் என்ற ஒன்று தோன்றும். இவையே வெளிப்படையாய்க் காணப்படுவன. நீர் கூறும் உயிர் இங்ஙனம் காணப்படுமாறில்லை. எனவே காணப்படும் அறிவெலாம் உடம்பில் வேறாய் உயிர் ஒன்று உண்டு; அதற்கோர் அறிவு உண்டு; அது வேறோர் உடம்பிற் சென்று புகும் என நீர் கூறுவன ஆகாயப் பூ, முயற் கொம்பு, மணலில் தைலம் முதலியன உண்டென்பார் கூற்றோடு ஒக்கும்.

***சைவா :*** அறிவு உடம்பின் குணம் என்றாய். பிணமான பொழுது உடம்பு எல்லாக் கருவிகளுடனும் கூடியிருந்தும் அறிவு நிகழவில்லையே! அதனை உடம்பின் குணம் எனக் கூறுவது எங்ஙனம்?

***உலகா :*** நான்கு பூதங்களும் கூடியிருந்தாலன்றோ அறிவு நிகழும். பிணமான பொழுது மூச்சு இயங்குவதின்மையின் காற்று நீங்கவே நெருப்பும் அவிந்ததென்றும் அறிகிறோம். அவை நீங்கினபின் அறிவு எங்ஙனம் நிகழும்?

***சைவா :*** பிணமான பொழுது காற்றும் வெப்பமும் நீங்குதலின் அறிவு நிகழாது என்றாய். உறங்கும் பொழுது அவ்விரண்டும் உள்ளனவே. அப்பொழுது அறிவு நிகழ்வதில்லையே. உறக்கத்தில் உன்மேல் பாம்பு ஊர்ந்தாலும், பகைவர் வந்தாலும் நீ அறிவாயா? ஆதலின் அறிவு உடம்பின் குணமன்று. அதனின் வேறாய், அதைப் பிணமான பொழுது அறியாமைக்குக் காரணம் காற்று முதலியவற்றின் நீக்கமன்று, உயிரின் நீக்கமே என்றும் உறக்கத்தில் அறியாமைக்கும் விழிப்பில் அறிதலுக்கும் காரணம் ஒடுங்கியும் உணர்ந்தும் வருவதாகிய உயிரின் அவத்தை வேறுபாடே என்றும் அறிவாயாக. (இவற்றைக் கேட்டுக் கொண்டிருந்த ஏகமதவாதி கூறத்தொடங்குகிறான்)

***ஏகமதவாதி :*** உலகாயதன் உயிர்க் கொலையாற் பாவம் இல்லை என்று கூறுவது தவறு. ஆனாலும் நீர் கூறுவதுபோல் எல்லாக் கொலையாலும் பாவம் உண்டென்பதும் பொருந்தாது. ஏனெனில் விலங்குகளை மக்களுக்குப் பயன்படும்படியே கர்த்தர் படைத்தார் என்று எங்கள் சத்தியவேதம் கூறுகிறது. ஆதலின் விலங்கு முதலியவற்றைக் கொன்று தின்றாற் பாவமில்லை. மக்களைக் கொன்றால் தான் பாவம் உண்டு.

*சைவா :* கர்த்தர் விலங்குகளை மக்களுக்குப் பயன்படவே படைத்தார் எனின் சிறிய ஈ, புழு முதலியவற்றை என்ன பயன் கருதிப் படைத்தார். அவை பயன்படாதனவெனில் உன் கருத்தா ஞானமயமானவர் எனல் எவ்வாறு?

*ஏசுமா :* எல்லா உயிரினங்களும் மனிதனுக்கு நேரே பயன்படாவிட்டாலும் வழிமுறையாற் பயன்படுவனவேயாம். சிறிய உயிரினங்கள் பெரிய உயிரினங்களுக்குப் பயன்படும் அவை மனிதனுக்குப் பயன்படும். ஆதலின் கர்த்தர் விலங்குகளை மக்களுக்காகவே படைத்தார் என்பது உண்மையே.

*சைவா :* ஆயின் எல்லா விலங்குகளும் மக்களுக்குப் பயன்படுகின்றனவா? தீமையன்றோ செய்கின்றன. இவற்றை மக்களுக்குப் பயன்படும்படிப் படைத்தார் எனல் எங்ஙனம்?

*ஏசுமத :* புலி முதலியன அடங்காமைக்குக் காரணம் அறியாமையின் இங்ஙனம் கூறுகிறீர். காரணம் கூறுகிறேன். கர்த்தர் ஆதியிலே ஒரு மனிதனைப் படைத்தார். பின்னர் விலங்குகளைப் படைத்து "இம்மனிதனுக்கும் இவனுடைய வழியினர்க்கும் அடங்கிப் பயன்பட்டு வாழுங்கள்" என்று கூறி மனிதனுக்கும் "நீ இன்னபடி வாழ்" என்று அறிவு கூறினார். அம்மனிதனோ கர்த்தர் கூறிய அறிவுரைக்கு மாறி நடக்கத் தலைப்பட்டான். அதனால் கர்த்தர் சினந்து "விலங்குகள் உனக்கு அடங்காமற்போக" எனச் சபித்தார்.

*சைவா :* கர்த்தர் சபித்தார் என்கிறாயே! ஆடு, மாடு முதலியன அடங்கி நடக்கின்றனவே! கர்த்தர் சபித்தார் என்பதனை எங்ஙனம் நம்புவது? சாபம் தவறிற்று எனில் கர்த்தர் ஆற்றலற்றவர் என்றாகுமோ?

*ஏசுமத :* எல்லா விலங்குகளும் அடங்காமற் போக எனக் கர்த்தர் சபிக்கவில்லை. கொடிய விலங்குகள் அடங்காமற்போக என்றும் மற்றவை அடங்குக என்றும் சபித்தார். ஆதலின் சபித்தது உண்மையே. சாபந்தவறிற்று என்பதற்கு இடமே இல்லை.

*சைவா :* இங்ஙனம் சொல்வதும் உனக்குத் தோல்வியாய் முடியும். புலி முதலிய கொடிய விலங்குகள் எல்லார்க்கும் அடங்காமற் போகின்றனவோ? புலி, யானை முதலியவற்றை அடக்கிப்பணி கொள்வாரும் உண்டு. அன்றியும் ஆடு, மாடு முதலியன எல்லார்க்கும் அடங்குகின்றனவோ? அவையும்

சிலருக்கு அடங்காமல் கொலை முதலிய துன்பத்தைச் செய்கின்றனவே. இங்ஙனம் மாறி நிகழ்வது ஏன்? உன் கருத்தர் சபித்தார் என்பதும் பொய்; விலங்கு முதலியவற்றை மக்களுக்குப் பயன்படுவதற்காகவே படைத்தார் என்பதும் உண்மையன்று. அங்ஙனம் கூறும் உன்னுடைய வேதம் சத்தியவேதம் அன்று என அறிக.

*ஏகமத:* அங்ஙனமாயின் இறைவன் எல்லாவுயிர்களையும் ஒரு படித்தாகப் படைக்காமல் சில உயிர்களை நெடிய தோற்றம் (மக்களுடைய) உடையனவாகவும் சில உயிர்களைக் குறுக்கே படர்ந்த தோற்றம் (விலங்கு முதலிய உடம்பு) உடையனவாகவும் படைத்தது ஏன்? அவன் எல்லா உயிர்களிடத்தும் ஒரு படித்தான விருப்பம் உடையவனன்றோ? அவனுக்கு ஒருதலை விருப்பம் எப்படி வந்தது?

*சைவா :* இறைவன் ஒருதலை விருப்பம் உடையவனல்லன். உயிர்களுக்கு அவையவை முற்பிறவிகளிற் செய்துள்ள கன்ம வேறுபாடுகளுக்குத் தக்க பிறவியை அவன் கொடுக்கின்றான். ஆதலின் பிறவி வேறுபாடுகளுக்கு அவ்வவ்வுயிர்கள் முன்செய்த நன்மை தீமைகளான் வரும் புண்ணிய பாவங்களே காரணம் என்று அறிக. (இவற்றைக் கேட்டுக்கொண்டிருந்த வாமி கூறுகிறான்)

*வாமி :* சைவாசாரியப் பெருந்தகையீர்! ஏகமதத்தார் கூறியது குற்றம் உடையதே. நீவிர் கூறியவற்றில் உயிர்கள் செய்த வினை வேறுபாட்டால் பிறவிகளும் வேறுபடுகின்றன என்பதும் கொலையாற் பாவம் உண்டென்பதும் எனக்கும் உடன்பாடே. ஆனால் எல்லா இடத்திலும் கொலையாற் பாவம் உண்டென்பதும் எனக்கும் உடன்பாடன்று. சில இடங்களில் உண்டு; சில இடங்களில் இல்லை. இதனை நான் உம்முடைய கொள்கை கொண்டே நிறுவுவேன். அதற்கு முன் உம்மை ஒன்று வினவுகின்றேன். முதலில் அதற்கு விடைசொல்லும். இயங்குவன நிலைத்திருப்பனவாகிய அனைத்துயிரும் ஒரே தன்மையவன்றோ? மரம், செடி, கொடி முதலியவற்றைக் கொன்று உண்ணும் உமக்குக் கொலைப் பாவம் இல்லையா?

*சைவாசாரியார் :* ஆம், நிலைத்திணைகளும் உயிருடையனவே யாதலின் அவற்றைக்கொன்றுண்பதாலும் பாவமுண்டு. ஆனால், இயங்குதிணைகளைக் கொன்று உண்பதால் வரும் பாவம் போல் பெரிய அளவில் வருவதன்று. சிறிதளவு பாவமே வருவதாகும்.

*வாமி:* உயிரினங்கள் அனைத்தும் ஒரு தன்மையவாய் இருக்க இயங்குயிர்க் கொலையாற் பாவம் மிகுதி. நிலையுயிர்க் கொலையால் குறைவு எனல் எங்ஙனம்!

***சைவா :*** உயிர்கள் அவையவை எடுத்த தோற்றத்துக்கேற்பப் பருவ வேறுபாடு உடையன. அவ்வகையில் நிலையுயிர்களாகிய மரஞ், செடி, கொடிகள் மிகத்தாழ்ந்த பருவம் உடையன. ஆதலின் அவற்றைக் கொல்வதால் வரும் பாவமும் குறைவே.

***வாமி :*** பருவ வேறுபாட்டுக்கு ஏற்பப் பாவம் மிகுதி குறைவு ஆகும் என்பதற்குச் சான்று யாது?

***சைவா :*** விலங்கினங்களுள் பசுக்கொலையால் வரும் பாவம் பாவங்களிளெல்லாம் பெரிது என்றும் அதனால் பசுவைக் கொன்றுண்போன் பன்றியைக் கொன்று உண்ணும் சண்டாளரைக் காட்டிலும் தாழ்ந்தவனாக மதிக்கப்படுவன் என்றும் நூல்கள் கூறுகின்றன. இதனால் பருவ வேறுபாட்டுக் கேற்பப் பாவம் மிக்கும் குறைந்தும் வரும் என்பது தெளிக.

***வாமி :*** பன்றிக் கொலையிற் பாவம் குறைவு என்பது ஏன்?

***சைவா :*** பன்றி விலங்கினங்களுள் தாழ்ந்த பருவம் உடையது ஆதலால்.

***வாமி :*** பருவத்தால் பசு உயர்ந்ததென்றும் பன்றி தாழ்ந்ததென்றும் கூறக் காரணம் என்ன?

***சைவா :*** விலங்கினங்கள் எல்லாம் ஒன்றென்று நீ நினைத்துக் கொண்டிருக்கிறாய். பசுவும் பன்றியும் விலங்கென்பதால் ஒன்றாகுமா? பசு இறைவனுக்கு ஆட்டத்தக்க பஞ்ச கவ்வியம் தருகிறது. ஆதலின் தெய்வமென வணங்கத்தக்கது. பசுவின் பெருமையை நூல்களெல்லாம் கூறுகின்றன. எனவே அதுவிலங்கினங்களுள் உயர்ந்த பருவம் உடையதெனத் தெளிக. மற்று, பன்றியோ மலத்தையுண்டு சேற்றிற்கிடப்பதையே இன்பம் என்றிருப்பது. இது தாழ்ந்த பருவம் உடையதென்பது சொல்லாமலே விளங்குமன்றோ!

***வாமி :*** விலங்கினம் என்பது மட்டும் கருதி ஒன்றெனலாகாதோ? பருவ வேறுபாடு கருத வேண்டுமோ?

***சைவா :*** அந்தணரும் புலையரும் மக்களினத்தால் ஒத்தவரே. ஆனால் அந்தணக் கொலையால் வரும் பாவம் பெரிதென நூல்கள் கூறுகின்றன. காரணம் உயர்ந்த பருவம் உடையோன். அவனைக் கொல்வதனால் வரும் பாவம் பெரிது எனச் சிறந்தெடுத்துக் கூறப்படுகிறது. புலையன் இழிதொழில் உடையவன். எனவே சாதி ஒன்றாக இருப்பினும் பருவ வேறுபாடு கருதி உயர்வு தாழ்வு கொள்ளப்படும்

எனத்தெளிக. எல்லாக் கொலையாலும் பாவம் உண்டு. பருவ வேறுபாட்டுக்கு ஏற்பப் பாவம் மிகுந்தும் குறைந்தும் இருக்கும். அந்தணக் கொலைபுலைக் கொலைகளிற் போலவும் பசுக்கொலை பன்றிக் கொலையிற் போலவும் இயங்குயிர்க் கொலை, நிலையுயிர்க் கொலைகளிற் பாவம் மிகுந்தும் குறைந்தும் இருக்கும் என அறிக.

இன்னும் ஒரு வகையாலும் நிலையுயிர்க் கொலையிற் பாவம் குறைவு என்பதைக் காட்டுவேன்.

ஒரு மரக்கொம்பை வெட்டிக் கொணர்ந்து நட்டால் அது தழைக்கிறது. வெட்டப்பட்ட தாய் மரமும் அழிவதில்லை. ஆனால் ஒரு விலங்கின் ஓர் உறுப்பை அரிந்து வேறோரிடத்தில் வைத்தால் அது உயிர் பெற்றெழுமா? அரியப்பட்ட விலங்குதானும் பிழைக்குமா? இவ்வகையாலும் நிலையுயிர்க் கொலையிற் பாவம் குறைவே என்பதை அறிக.

***வாமி:*** நிலையுயிர்க் கொலையிற் சிறிதளவு பாவம் உண்டு என்பதை நீயிர் ஒப்புக் கொள்கிறீர். நாள்தோறும் நாம் செய்யும் நிலையுயிர்க் கொலையினால் சிறிது சிறிதாய்ப் பாவம் பெருகுமல்லவா? அன்றியும் நிலையுயிர்களைப் பயிரிடும் காரணத்தால் இயங்குயிர்க் கொலைகளும் நிகழுமே. நெல், கீரை முதலியன பயிரிட வேண்டுமானால் நிலத்தை உழுதல், கொத்துதல் முதலியன செய்ய வேண்டும். அப்பொழுது எண்ணிறந்த புழு, பூச்சிகள் மடியும். இந்தப் பாவமும் சேர்ந்து பெருகி இறுதியில் துன்பம் செய்யுமல்லவா? இவை நீங்குவது எங்ஙனம்?

***சைவா:*** அங்ஙனம் நாள்தோறும் நிலையுயிர்க் கொலையாலும் உழுதல், கூலி வேலை செய்தல், வாணிகம் செய்தல், சினங்கொள்ளுதல், பொய் கூறல், வீடு தூர்த்தல், மெழுகுதல், நெருப்பு மூட்டல், தண்ணீர் கவர்தல் என்னும் பத்து வகையாலும் வரும் பாவம் நிலையுயிர்ப் பொருளானாகிய உணவினை இல்லறத்தான் அறநூல் கூறும் தெய்வம், விருந்து, நெருப்பு, குரு ஆகியவர்களுக்கு படைத்து அறம் வளர்த்துப்பின் உண்பானாகில் நாள்தோறும் அழிந்துவிடும். ஆதலின் அவனுக்கு இறுதியிற் பாவம் இல்லையாய்ப்போம்.

***வாமி:*** நிலையுயிர்க் கொலையால் வரும்பாவம் அவ்வுணவினைத் தேவர் முதலியோர்க்கு ஊட்டி உண்ணக் கழியுமெனின் இயங்குயிர்க் கொலையாலும் புலால் உண்கையாலும் வரும் பாவமும் அப்புலாலைத் தேவர் முதலியோர்க்கு ஊட்டி உண்ணக் கழியுமல்லவா?

***சைவர்:*** தேவர் முதலியோர் புலால் படைத்தலை விரும்பார். ஆதலின் அதனை அவர்களுக்கு ஊட்டலாகாது. அது பின்னும் பெரும் பாவத்துக்கே காரணமாம். எதுபோலெனில்: ஒருவன் ஒரு குற்றம் செய்துவிட்டு அதனை மன்னிக்கும்படி அரசனைவேண்டிக் கொள்ளச் செல்லும் பொழுது அவ்வரசனுக்கு விருப்பமில்லாத செயலைச் செய்து கொண்டு போனால் முன்னர்ச் செய்த குற்றம் மன்னிக்கப்படாததோடு பின்னர்ச் செய்த விரும்பத் தகாத செயலுக்கும் சேர்த்துப் பெருந்தண்டம் கிடைக்குமதுபோல என அறிக. ஆதலின் இயங்குயிர்களைக் கொன்றதொரு பாவமும் அப்பாவம் நம்மைச் சேராதிருக்க அவ்வூனைத் தேவர் முதலியோருக்குப் படைத்ததொரு பாவமும், ஆக்ப்பெரும்பாவம் சேருமேயன்றி இவ்வகையிற் பாவம் கழியும் என்பதே இல்லை.

***வாதி:*** தேவர் முதலியோர் புலாலை விரும்பார் என்பது தவறு. நாயன்மார்களுள் சிறந்தகண்ணப்பர் இறைவனுக்குப் புலால் ஊட்டினாரே?

***சைவர்:*** கண்ணப்ப நாயனாருடைய பக்திநிலை வேறு நம்நிலை வேறு. அவர் செயலை நாம் விதியாகக் கொள்ளலாகாது. அவர் முற்பிறப்பிற் செய்த புண்ணியத்தின் பயனாய்க் காளத்தியப்பரைக் கண்ட அளவில் பேய் பிடியுண்டாரைப்போல் தன்வயமிழந்து அவர் வயமானார். கண்ணப்பர் செயல் எல்லாம் காளத்தியப்பர் செயல் ஆயிற்று. அவர் நம்மைப்போல் நன்றுஇது தீது இதுவென ஒருவர்பாற்கேட்டறிந்து செய்தாரல்லர். தாம் நாள் தோறும் செய்து பழகிய வேட்டைத் தொழிலைச் செய்து அதனாற் கிடைத்த ஊனைப் பக்தி மிகுதியால் ஊட்டினார். அவர்போல் நாமும் இறைவனுக்குப் புலால் ஊட்டப் புகுந்தால் எல்லாவகையாலும் அவர் போல ஒழுக வேண்டுமே. நாம் வழிபடும் இறைவனை அவர்போல வாய் நீரால் ஆட்டிக் காலால் உதைக்கவும் வேண்டுமே. அங்ஙனம் செய்வோமா? செய்தால் எத்தகைய நரகத்திற் போய் விழுவோம்! அங்ஙனம் நினைப்பதும் பெரும் பாவமன்றோ!

பத்தி மிகுதியாற் செய்யப்பட்டவற்றை விதியாகக் கொள்ளலாகாதென்பதை வேறோரு வகையாலும் உனக்குக் கூறுகிறேன்.

சண்டேச நாயனார் பிதாவைக்கொன்று முத்தியடைந்தார்; சிறுத்தொண்ட நாயனார் மகனைக்கொன்று சமைத்து அடியார்க்குப் படைத்து முத்தியடைந்தார்

என்று நூல் கூறுகிறது. இதை அறிந்த நாம் முத்தியடைய வேண்டுமெனில் தந்தையைக் கொல்லல் வேண்டும்; மகனைக் கொல்லல் வேண்டும் என்று விதி வகுப்போமா? அங்ஙனம் கொல்லத் துணிவோமா? அவையெல்லாம் இறையன்பின் மிகுதியால் அவனருள் வலியாற் செய்யப்பட்ட, உலகியலைக் கடந்த செயல்கள். அவற்றை நாம் விதியாகக் கொள்ளலாகாது அதற்கு ஓர் உதாரணமும் சொல்கிறேன். ஓர் ஏரியில் நீர் நிறைந்திருக்கிறது. மதகின் வழியே நீர் பாய்ந்து வயல்களுக்குப் பயன்படுகிறது. பெருமழை பெய்த பொழுது ஏரியில் நீர் மிகுந்து கரையின் நடுவே உடைத்துக்கொண்டு நீர் வெளிவந்து பாய்கிறது. அந்த உடைப்பை யாரேனும் மதகென்று கொள்வார்களா? அந்த வழியிலேயே மேலும் நீர் பாய்ச்சிக் கொள்ள முயல்வார்களா? ஏரியில் எப்பொழுதும் அமைந்துள்ள மதகின் வழியே நீர்பாய்ச்சிக் கொள்வது தானே முறை. வெள்ளமிகுதியால் உடைப்பெடுத்துச் சென்றவழி மதகாகாததுபோல் பத்தி மிகுதியாற் செய்த செயல் விதியாகாது. விதியாகக்கொள்ளின் பெருங்குற்றத்திற்கே ஏதுவாகும் என அறிக.

***வாமி:*** சத்திகளுக்குப் புலால் படைக்கலாம் என்று விதி இருக்கிறது. சிவம் சத்தியின் வேறானதன்று. ஆதலின் சிவனுக்கும் படைக்கலாம் என்றே கொள்ளவேண்டும். ஆதலின் சிவனுக்குப் புலால் படைக்க விதியில்லையென்று நீயிர் சொல்வது எவ்வகையிலும் ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று.

***சைவா:*** சத்திக்குப் புலால் படைக்கலாம் என்று சொல்வதே பெரும் பாவம். அவள் உலகுக்கெல்லாம் அன்னை. முப்பத்திரண்டறங்களும் வளர்க்கும் பேரருள் உடையவள். அவளுக்காக உயிர்களைக் கொன்று படைக்கலாம் என்கிறாய்! நீ சொல்வது போல் சிலர் தம்பனம், மோகனம், உச்சாடனம், வசியம், ஆகருடணம், வித்துவேடணம், பந்தனம், மாரணம் எனப்பட்ட அட்டகன்மங்களைக் குறித்துப் பத்திரை முதலாகிய சத்திகளில் ஒவ்வொரு சத்தியை வழிபடும் பொழுது புலால் படைக்கிறார்கள். அவர்களும் சத்திகளை வழிபடும் பொழுது புலால் படைப்பதில்லை. சுத்தோபசாரமே செய்கின்றனர். சத்தியைச் சூழ்ந்திருக்கும் ஏவல் தெய்வங்களாகிய பைசாசங்களுக்கே புலாலும் மதுவும் படைக்கின்றனர். ஆதலின் சத்திக்குப் புலால் படைக்க விதியிருக்கிறது என நீ கூறுவது பிழை.

***வாமி:*** சத்தியின் ஏவல் தேவதைகளாகிய பைசாசங்களுக்குப் புலால் படைக்கும் வழக்கம் உண்டு என்பதை நீயிரும் உடன்படுகிறீர் எனத் தெரிகிறது. சத்திக்குப் படைத்தாலென்ன? ஏவல் தேவதைகளுக்குப் படைத்தாலென்ன? எந்தக் குயவன் சுட்டாலும் பானை வேகும் என்பதுபோல் எந்தத் தெய்வத்துக்குப் படைத்தாலும் பாவம் நீங்குமே.

***சைவா :*** சத்தியின் ஏவல் தேவதைகளாகிய பூத பைசாசங்களுக்குப் புலால் படைப்பதால்கொலைப் பாவம் நீங்குவதில்லை. நீங்குமென்றாலும் முழுவதும் நீங்குவதில்லை. சிறிதே நீங்கும். எப்படியெனில், ஒருவன் ஓர் அரசனிடம் சிறு குற்றம் ஒன்று செய்துவிட்டு அவ்வரசனை வழிபட்டு அவன் மகிழுமாறு நடந்து அக்குற்றத்தால் வரும் தண்டனையைப் போக்கிக்கொள்கிறான். இதைக்கண்ட மற்றொருவன் பெரிய குற்றம் செய்துவிட்டு அதைப் போக்கிக்கொள்ள நேரே அரசனிடம் முயலாது அரசனுடைய ஏவலரை அணுகி அவர் மகிழுமாறு நடந்து தண்டனையைப் போக்கிக்கொள்வேன் என முயன்றால் அவனுக்கு என்னபயன் உண்டாகும்? ஏவலரால் நன்மை ஒன்றும் உண்டாகாது; உண்டாயினும் சிறிதளவேயாம். அவர் தமக்கு விதித்த வரம்பு கடந்து நன்மை செய்யப் புகுந்தால் அவரும் அரசனால் பெருந்தண்டனை அடைவர். இது போன்றதே நிலையுயிர்களைக் கொன்று உண்டவன் பாவத்தை இறைவன் தனக்கு விதித்த இல்லற நெறியில் வழுவாதொழுகித் தேவர் முதலியவர்களுக்கு அவ்வுணவைப் படைத்து உண்பதனால் போக்கிக் கொள்வதைக் கண்ட மற்றொருவன் இயங்குயிர்களைக் கொன்று அதனால் வரும் பாவத்தைச் சத்தியின் ஏவலர்களுக்கு அவ்வூனைப் படைத்துண்பதால் போக்கிக் கொள்வேன் என முயல்வதும். பூதபைசாசங்களாலோ அவற்றிக்கு மேலான சத்தியாதி தேவதைகளாலோ அவனுக்கு அதிக நன்மை செய்ய இயலுமா? அப்படிச் செய்ய முயன்றாலும் அக்குற்றத்தினால் அவைகளும் இறைவன் ஆணையால் பிறப்பு இறப்புகளுக்குட்பட்டுத் துன்புற நேரும்.

***வாமி:*** தேவர்க்குப் புலால் படைத்தல் தவறு என்பதை நான் உடம்படுகின்றேன். ஆனால் வானுலகத்துள்ள தேவர்க்குத்தான் படைக்கக் கூடாது. இங்குள்ள துர்க்கை முதலிய சத்திகளுக்குப் படைக்கலாம். அது பொருத்தமே.

***சைவா:*** இங்கு, அங்கு என்பதொரு வரையறையில்லை. எங்கெங்கே தெய்வத்தன்மை உண்டோ அங்கங்கே புலால் உண்பது இல்லை. படைப்பதும் தீது. எங்கெங்கே அசுரத் தன்மையுண்டோ அங்கங்கே புலால் உண்பது உண்டு. படைப்பதும் உண்டு. ஆதலின் தேவர்களுக்குப் புலால் படைப்பது பொருத்தமன்று என்று அறிக.

***சைவா:*** யாம் செய்யும் வேள்விக்கு வேதவிதியுண்டு. நீ செய்வன வேதத்துக்கு உடம்பாடல்ல.

***வாமி:*** வேத விதியின்மையால் குறை என்ன? எம்வாம தந்திரத்தில் விதி இருக்கிறதே.

***சைவா:*** உன் வாமதந்திரம் இறைவன் மொழியன்று. அது வேதத்துக்கு மாறானது. ஆதலின் விதியாகக் கொள்ளப்படாது.

***வாமி:*** உம் வேதம் எம் வாம தந்திரத்துக்குப் புறம்பானது. ஆதலின் உம் வேதம் இறைவன் மொழியன்று என யாம் கூறுவோம்.

***சைவா:*** வேதம் ஆகமம் என்னும் இரண்டும் இறைமொழி. உலகத்தில் உள்ள ஏனைக் கலை, ஞானநூல்களெல்லாம் அவற்றின் வழி நூல், சார்பு நூல்களாகக் கொள்ளத்தக்கன. வேதாகமங்களின் துணிந்த பொருளையே அவை தனித்தனி எடுத்து விரித்துக் கூறுகின்றன. இக்கலை, ஞான நூல்களெல்லாம் வேதாகமங்களுள் ஒரோவழி அடங்கும். எது போலெனில் ஒரு சிற்றூர்க் கணக்கு முழுவதும் அரசன் கணக்கில் அகப்பட்டு அவ்வரசன் கணக்கு முழுவதும் அச்சிற்றூர்க் கணக்கில் அகப்படாமை போல. ஆதலின் வேதம், ஆகமம் என்ற இரண்டே இறைமொழி. இவற்றிற்கு மாறுபட்டன இறைமொழியாகா. உன்னுடைய வாம தந்திரம் இவற்றிக்கு மாறுபட்டதாதலின் இறைமொழியன்று என அறிக.

***வாமி:*** எல்லாச் சமய நூற்பொருளும் வேதத்துள் ஒரோவழிக் கூறப்படுமாயின் எம்முடைய வாம தந்திரமும் கூறப்படுமன்றோ! அது வேத விரோதமாவது எங்ஙனம்?

***சைவா:*** உன்னுடைய வாம தந்திரமும் வேதத்துள் கூறப்படுகிறது. ஆனால் உடம்பட்டுக் கூறவில்லை. 'கொலை கூறுதலின் அது கொடு நெறி; கொள்ளத் தக்கதன்று' என்று பழித்துக் கூறுகிறது. ஆதலின் வேத விரோதமேயாகும்.

***வாமி:*** வாம தந்திரம் கொடு நெறியாகில்அந்நெறி நிற்போர்க்குச் சித்திகள் உண்டாகா தொழிய வேண்டுமே; அந்நெறியில் நின்று பல சித்திகளில் வல்லராய் விளங்குவோர் பலரை நாம் இன்றும் காண்கிறோம்!

*சைவா:* வாம தந்திர நெறியில் நிற்போர் மட்டுமா சித்திகளில் வல்லராகின்றனர்? வேதநெறியில் நிற்கும் உயர்ந்தோரும் உன்னைப்போல் புறம்பான நெறியில் நிற்போரும் பூதபைசாசங்களை வழிபடும் தாழ்ந்தோரும் ஆக எல்லோரும் அவரவர் முற்செய்த கன்ம பலனுக்கேற்ப அவ்வத் தெய்வங்களை உண்டென்று கருதி நெறியுடன் வழிபட்டுச் சித்திகளில் வல்லராகின்றனர். அவ்வத் தெய்வங்கள் தத்தம் ஆற்றலுக்கேற்ற சித்திகளை நல்குகின்றன. ஆதலின் சித்தி கைவருதல் காரணத்தால் உன் நெறிக்கு ஒரு முதன்மை கருதல் வேண்டாம்.

*வாமி :* எந்நெறியில் நிற்போரும் சித்திகளில் வல்லராவர் எனின் எல்லா நெறியும் தம்முள் ஒத்தனவன்றோ? உம்முடைய வேதாகம நெறி மட்டும் உயர்ந்ததென்பது ஏன்?

*சைவா :* திருவருளால் வேதாகம நெறியில் நிற்போர் பிரம சித்தியைப் பெறுகின்றனர். இது அழியா இன்பமாகும். பரசிவசித்தி, சுத்தமுத்தி என்றெல்லாம் கூறப்படும் இச்சித்தி, பிற நெறியில் நின்று பெறுதல் அரிது. பிற நெறியில் நின்று பெறுவனவாகிய சித்திகளும் மற்றும் பதமுத்திகளும் அழியா இன்பமாவனவல்ல. துன்பத்துக் கேதுவாவனவே. ஆதலின் வேதாகம நெறியே உயர்ந்த நெறி எனக் கொள்க.

*வாமி:* உமக்குப் பிரமம் சித்திக்கும் என்பது கண்கூடாகக் காணத் தக்கதன்று, யாம் பெறும் சித்திகள் கண்கூடாய்க் காணத் தக்கன. ஆதலின் எம்முடைய நெறியே உயர்ந்தது.

*சைவா:* வேதாகம நெறியில் நின்று பிரமசித்தியடையும் பெருமையினார்க்குக் கைவராத சித்திகளே இல்லை. ஆதலின் அவர்கள் எல்லாச் சித்திகளையும் கண்கூடாக அடையும் வல்லமையுடையார் என்பது உறுதி. உலகில் ஒரு பேரரசனுக்கு ஒரு சிற்றூரின் மணிய ஆட்சி நேரே உண்டாவதில்லை. அதுகொண்டு அச்சிற்றூராட்சி அவனுக்கு இல்லையென்று சொல்லலாமா? உண்டென்று நாட்டவேண்டுமா? வேதாகம நெறியில் நிற்போர்க்கும் எல்லாச் சித்தியும் கண் கூடாகவே கைவரும் என அறிக.

*வாமி:* வேதாகம நெறி நிற்போர்க்குப் பிரமம் சித்திக்கும் என்று நீவிர் கூறுகிறீர். எம்முடைய நெறியிற் போல உம்முடைய நெறியில் அச்சித்தி எளிதில்

கைவருவதில்லை. உம் நெறியில் நின்று பிரமம் சித்திக்குமோ சித்தியாதோ என்று ஐயத்தோடே முயல்கின்றனர். அங்ஙனம் முயல்வதைவிட்டு எம் நெறியில் நின்று சத்தியை வழிபட்டால் எளிதில் ஐயமின்றிச் சித்தியடையலாமே. பரமசித்தி என்பது மிக உயர்ந்ததேயெனினும் விரும்பினவிடத்துக் கைவராவிடின் அதனால் என்னபயன்? பசிக்கு உதவாத அறுசுவையுணவினால் என்ன பயன்? கூழாயினும் காடியாயினும் பசித்தவிடத்து உதவுவதையே உலகர் விரும்புவர்.

***சைவர்:*** எளிதில் சித்தியெய்தலாம் என்பதற்காக உன்வாம தந்திர நெறியை யாரேனும் அடைவாரா? கீழோர் நட்பு எளிதில் கிடைக்கும். பெரியோர் நட்பு அரிதிற் கிடைக்கும். எளிதிற் கிடைக்கிறது என்பதற்காக ஒரு புலையனுடன் நட்புக்கொண்டு என்ன பயன்? சிறுபயன்களே அவனாலாகும். அரிதிற் கிடைப்பதானாலும் ஒரு பேரரசனை நட்புக் கொள்வது சிறந்த பயன் விளைக்கும் முதலில் அவனுடைய அமைச்சர் முதலாயினாருடன் பழகிப்பின் அரசன் முன் சென்று அவன் மகிழும் வழி ஒழுகி நடப்பதனால் அவ்வரசன் அவனைத் தன்னைப்போல் ஓர் அரசனாகும் சிறப்புச் செய்வான். உன்னுடைய வாம தந்திர நெறி இழிந்த புலையன் நட்புப் போலாகும். அதிற்கிடைக்கும் பயன் பெரிது போலக் காட்டி இறுதியில் உடம்புக்குரிய அருந்தல், பொருந்தல்களை மட்டும் தருவதாகிய அட்டகன்மமாய் ஒழியும். ஆதலின் புல்லறிவாளரே உன் நெறியைச் சேர்வர்.

***வாமி:*** முத்தியை விரும்பி எம் நெறியை அடைவார் ஒருவரும் இலரோ?

***சைவர்:*** நீ கொலை செய்ய அஞ்சாதவன். சத்திவழி பாட்டின்கண் மகளிர் மத்தியில் அவர் களிப்பெய்தும்படி மகிழ்ந்து ஆடுபவன். ஆதலின் மகளிரொடு மகிழ்தலே முத்தி என்பவனும் கொலை செய்ய அஞ்சாதவனுமாகிய உலோகாயதனே உன்னை உயிர் நண்பனாய்க் கொள்வான். அவன் மூடரெல்லாருள்ளும் முழு மூடன். கொலை காரணமாய் முத்தியே கிடைக்குமெனினும் ஞானிகள் கொலை காரணமாய் அட்டகன்மத்தை எய்தும் உன் நெறியில் முத்தியை விரும்பிச் சேர்வாரா?

***வாமி:*** ஞானியர் நெருப்புக்கு ஒப்பாவர் என்று எல்லா நூல்களும் கூறுகின்றன. நெருப்பு தன் கண் எந்தப் பொருள் (இழிந்த மலம் முதலியன உட்பட) சேர்ந்தாலும் சுட்டு நீறாக்கி விடுகிறது. அதுபோல ஞானியர் தனக்கு எத்தகைய உணவுகள்

படைக்கப் பட்டாலும் நன்று தீது பாராமல் உட்கொண்டு ஞானாக்கினியால் நீறாக்கி விடுவர். ஆதலின் ஞானியர் புலால் உண்ணக்கூடாது என்பதில்லை. ஞானமில்லாதோரே புலாலை நீக்க வேண்டும்.

***சைவா:*** ஞானியர் நெருப்புக்கு ஒப்பாவர் என்பது உண்மையே. ஆனால் அதன் கருத்து, வினையைச் சுடுவான் என்பதே. ஞானியானவன் சஞ்சிதகன்மத்தை அருட்பார்வையாற் போக்கிப் பிராரத்த கன்மத்தை எடுத்த உடம்பால் துய்ப்பித்துக் கழித்து மேலும் பிறப்புக்கு ஏதுவாய் வரும் ஆகாமிய கன்மத்தை ஞானாக்கினியால் சுட்டுமேல் பிறவி வாராமல் செய்கிறான். இக்கருத்தன்றி ஊன் முதலிய தாழ்ந்த உணவு இட்டாலும் ஞானாக்கினியாற் சுட்டுவிடுவான் எனக் கருத்துக்கொள்ளின், அவன் நெருப்புப்போல மலம் முதலியன படைத்தாலும் உண்ணல் வேண்டும். உண்பானாயின் அவனைப் பித்தன் என்றன்றோ கூறுவர். உண்மை ஞானி எனப்படுவோர் யாரெனில் உட்கருவி, புறக்கருவிகளை அடக்குதல், ஒருவழிப்படுத்தல், பொறை, திடம், ஞானம் அடைதல், வாய்மை கூறல், இன்சொற் கூறல், ஈதல், உயிர்கட்கு உறுதியாவன செய்தல் ஆகிய மானத தீர்த்தம் ஆடி முத்தியாகிய அமுதினை உண்டிருப்போரே. இது நிற்க, நெருப்புக்கு ஒப்பாவான் என்பதற்கு நீ கொள்ளும் கருத்தின்கண் வேறு சில குற்றங்களும் உள. நெருப்பு ஒரு காரணம் பற்றி ஒன்றனைச் சுடுமேயன்றித் தன்னிச்சையாற்சுடாது. காரணத்தாற் சுடும்பொழுதும் ஒன்றனை விரும்பிச் சுடுதலும் ஒன்றனை வெறுத்துத் தள்ளுதலுமின்றி எல்லாவற்றையும் ஒரு தன்மையாய்ச் சுடும். ஞானியும் அங்ஙனம் எல்லா ஊனையும் ஒரு தன்மையாய் உண்ண வேண்டுமே. பன்றியூனை உண்பதுபோல் நாய், கழுதை, உடும்பு. ஓணான் முதலியவற்றின் ஊனை உண்பதில்லையே! அதுவன்றித் தான் உண்ணும் பொருளில் ஈ, எறும்பு, பாச்சை, கரப்பான் முதலியன விழுந்திருந்தாலும் அருவருத்து முன் உண்டதையும் கக்கிவிடுகிறானே. ஆதலின் ஞானி நெருப்புக்கு ஒப்பாவான் என்பதற்கு நீ கொள்ளும் கருத்துப் பொருந்தாது என அறிக.

(இவற்றைக் கேட்டுக்கொண்டிருந்த பௌத்தன் கூறுகிறான்)

***பௌத்தன்:*** சைவாசாரியப் பெருந்தகையீர்! வாமி கூறியது குற்றம் உடையது.

---

1– பாரதக்கதை

அவன் புலால் உண்ணும் விருப்பத்தினால் சத்தி வழிபாடு செய்கிறான். நீவிர் அவனை மறுத்துக் கூறியன எல்லாம் எமக்கும் உடம்பாடே. ஆனால் ஒரு சிறு வேறுபாடு எமக்கு உண்டு. அது : ஒரு ஞானிதானே புலாலை விரும்பி ஒருயிரைக் கொன்று உண்பது தீது; யாரேனும் கொன்று படைத்தால் உண்ணலாம்; அதில் குற்றமில்லை என்பதே. பாவம் கொன்றவனுக்கே சேரும். உண்டவனுக்குச் சேராது. எப்படியெனில் ஒருவன் தண்ணீர்ப் பந்தல் வைத்து வழிப்போக்கருக்கு ஊட்டுகிறான். புண்ணியம் தண்ணீர்ப் பந்தல் வைத்தவனுக்கா? தண்ணீர் உண்டவனுக்கா? உண்டவனுக்கு வேட்கை நீங்குவதன்றிப் புண்ணியம் உண்டாவதில்லை. அதுபோல ஊனுண்ட ஞானிக்கும் பசி நீங்குவதன்றிக் கொலைப் பாவம் உண்டாவதில்லை. கொன்று ஊட்டினவனுக்கே கொலைப் பாவம் உண்டாகும். இது எம் கொள்கை.

***சைவா:*** பாவம் கொன்றவர்க்கே; தின்றவர்க்கில்லை என நீ கூறுவதும் தவறே. ஊன் உண்டவனுக்கு அதில் அவா மேலும் மேலும் பெருகும். ஆதலின் ஒரு கொலை நிகழக் காணின் அது தீதென அறிந்தும் தடுத்துரைத்தால் இதன் ஊனை நமக்கு உண்பிக்க மாட்டானே என்று கருதி வாளா இருப்பான். அதனால் அவனும் அக்கொலையை உடன்பட்டவனாகின்றான் அறிவுடைய ஒருவனுக்கு அழகாவது பிறிதோருயிர் துன்புறக்கண்டவிடத்து அத்துன்பத்தைப் போக்கலும் துன்பத்துக்கு இரங்கலும் துன்பம் செய்வாரைத் தடுத்தலுமேயாம். அவன் அங்ஙனம் செய்யாமையினால் ஊன் உண்டபாவம். கொலையைக் கண்டும் தடுக்காத பாவம், கொலையை உடன்பட்டபாவம் என மூன்று குற்றம் அவனுக்கு உண்டாம்.

***பௌத்தன் 2:*** பௌத்தரில் யான் வேறு வகையினன். முன்னையோன் கூறியதும் குற்றமே. ஞானி ஒரு கொலை நிகழக் காணின் தடுத்துரைக்கவே வேண்டும். ஆனால் அந்த ஞானி தடுத்துரைக்கவும் கேளாது ஒருவன் "கொன்ற பாவம் எனக்கு வந்தால் வரட்டும்; நீயிர் இவ்வூனை உண்ணும்; அதுவே எனக்கு மகிழ்ச்சி" என்று கூறிக்கொன்று ஊட்டினானாயின் அப்பொழுது அந்த ஞானி அவ்வூனை உண்ணலாம்; அதனால் குற்றமில்லை என்பதே தக்கது.

***சைவா:*** தடுத்தும் கேளாத கொடியவர்களை ஞானிவிட்டு நீங்குதலே தக்கது.

அவனுடன் இருந்துஅவன் ஊட்டும் ஊனை உண்ணில் அவனுக்கும் கொலைப் பாவம் உண்டாகும் என்பது உறுதி. இதற்கு ஓர் உதாரணம் சொல்கிறேன். ஒருவன் அரசனுடைய களஞ்சியத்தில் திருடச் செல்கிறான். அதைக்கண்ட அவனுடைய உறவினன் அரசனுடைய களஞ்சியத்தில் திருடினால் மிகப் பெரிய தீங்கு நேரும் என்று தடுக்கிறான். அவன் அதனைக் கேளாமல் "தீங்கு வந்தால் நான் ஏற்றுக்கொள்கிறேன். நான் திருடிக் கொண்டு வந்து கொடுப்பதை உண்டு நீ சுகமாக இரு" என்று சொல்லித் திருடிவந்து கொடுக்கிறான். களவு வெளிப்பட்டபொழுது தண்டனை திருடினவனுக்கு மட்டுமா? கிடைக்கும். அப்பொருள்வைத்திருந்தவன், வாங்கினவன், உண்டவன், துணையிருந்தோன் ஆகிய எல்லோருக்குமே கிடைக்குமன்றோ! ஆதலின் கொன்று ஊட்டினாலும் ஊன் உண்ணல் பாவம் என அறிக.

***பௌத்தன் 3:*** பௌத்தருள் யான் முன்னை இருவரின் வேறானவன். தானே கொன்று தின்பதும் பாவம். ஒருவன் கொன்று ஊட்டியதைத் தின்பதும் பாவம். கொலை தடுத்துக்கூறியும் கேளாமற்கொன்று ஊட்டியதைத் தின்பதும் பாவம். எவ்வகையிலும் கொலையினால் இறந்தவற்றின் ஊனை உண்பது பாவம் என்று நீயிர் கூறியன எல்லாம் எமக்கு உடம்பாடே. கொன்றார் பாவம் தின்றார்க்கும் உண்டு என்று உலக வழக்கிலும் கூறுவர். ஆனால் ஊன் உண்ணுதலே கூடாது என்பதை நான் உடம்படேன். கொலையினால் இறந்தவற்றின் ஊனை விட்டு, தானே இறந்தவற்றின் ஊனைஉண்பதில் பாவமே இல்லை, இவ்வூனை உண்ணலாம்.

***சைவா:*** தன்னியல்பாய் இறந்தவற்றின் ஊனை உண்டு மகிழ்ந்தோன் மற்றோர் உயிர்க்குச் சாவுவந்த விடத்து இரங்காது மகிழ்வன். அவனுக்குப் பிறிதோருயிரின் துன்பங்கண்டு இரக்கம் தோன்றுவதின்மையின் அது கொலைப் பாவத்துக்கு ஏதுவாகும். நல்ல கொழுத்த விலங்கைக் கண்டால் ஊனுண்ணும் அவாவால் இது எப்பொழுது சாகும் என்றே கருதியிருப்பான். ஆதலின் வேறு எவ்வகையில் ஊன் உண்டாலும் பாவமே. ஊட்டுவதும் பாவமே. அவர் நரகம் அடைவர். எனவே ஊன் உண்ணாமையால் தன் உயிரே கெடுவதாயினும் ஊன் உண்டலை ஒழிதல் வேண்டும். தண்டனையால் ஒருவன் ஊன் உண்ண நேர்ந்தாலும் நஞ்சுண்டவன் உடனே அதற்கு மாற்றுத் தேடுதல் போல் உடனே கழுவாய் தேட வேண்டும். (இவற்றைக் கேட்டுக் கொண்டிருந்த லௌகீகன் கூறத் தொடங்குகிறான்)

(இவற்றைக் கேட்டுக் கொண்டிருந்த லௌகீகண் கூறத் தொடங்குகிறான்)

***லௌகீகன் 1:*** (கல்வியறிவுடையவன்) வேள்வி, திதி, மருந்து, உயிருய்யுமிடம் ஆகிய நான்கிடத்தும் ஊன் உண்ணலாம் என்று வேதாகம விதியிருக்கிறதே. மற்றெவ்விடத்தும் ஊன் உண்டல் தீது என்கிறீரே!

***சைவர்:*** வேதாகமங்கள் அங்ஙனம் கூறினாலும் இக்கலியுகத்தில் ஊன் உண்டல் தீது என்றே கொள்ளவேண்டும். இதற்கு விதி சான்றோர் மரபே.

***லௌகீ:*** இக்கலியுகத்துக்கு மட்டும் அவ்விடங்களிலும் ஊன் உண்டல் தீது என்பது ஏன்? இதற்கு நூல் விதி காட்டமாட்டாது சான்றோர் மரபைக் காட்டுவது எங்ஙனம் பொருந்தும்?

***சைவர்:*** ஒரு காலத்துக் கூறிய விதி எல்லாக் காலத்தும் செல்லும் என்பது கூடாது. காலத்துக்கேற்பச் சான்றோர் மேற்கொண்டொழுகும் மரபையும் அறிந்தே கொள்ளவேண்டும். ஓர் எடுத்துக்காட்டுச் சொல்கிறேன். பேறுகள் எல்லாவற்றுள்ளும் சிறந்ததுமகப்பேறு. இதனைப் பெறாதவர் தென்புலத்தார் கடன். செய்யுமாறில்லை. ஆதலின் மகப்பேறு இன்றியமையாதது. நூல்கள் ஏழுவகை மகப்பேறு கூறும். அவையாவன:– 1.தன் மனைவியிடத்துத் தனக்குப் பிறந்தோன் 2.தன் மனைவியிடத்துப் பிறனுக்குப் பிறந்தோன். 3.பொருள் கொடுத்து வாங்கப்பட்டோன். 4.தத்தம் வாங்கப் பட்டோன். 5.அடைக்கலமாக வந்து புகுந்தோன். 6.மகன் மகன் (பெயரன்) 7.தன்னால் ஒருவன் உயிருய்ந்ததனால் மகன் என முறைமைப் பட்டோன் என்பன. இவ்வெழுவருள் தன் மனைவியிடத்துப் பிறந்தோனே சிறப்புடையன். ஆதலின் தன் மனைவியிடத்துத் தன்னால் புத்திரப்பேறு வாய்க்காவிட்டால் அவனைப் பிறர்க்குக் கூட்டியேனும் புத்திரப்பேறு அடையலாம் என்பது மற்றையுகங்களின் விதி[1] . அவ்விதியை நீ இக்கலியுகத்துக் கொள்ளும் மரபு உண்டோ? மற்றொன்றும் காட்டுகிறேன். மிகச் சிறந்த தவ ஒழுக்கங்களுடைய பெரியோரும் தம் ஆசாரியனையும் அவனுடைய மனைவியையும் திருவடி தொட்டு வணங்க வேண்டும் என்று நூல் விதியிருக்கிறது. ஆனால் ஆன்றோர் ஆசாரியனை மட்டும் திருவடி தொட்டும் அவன் மனைவியை அணுக நின்றும் வணங்குகின்றனர். இது இந்தயுகத்தின் இயல்புணர்ந்து ஆன்றோர் மாற்றி

மேற்கொண்டொழுகிய மரபன்றோ! நூல் விதிக்கும் ஒழுக்கங்கள் காலத்துக்கேற்ப மாற்றி மேற்கொள்ளத் தக்கன என்றும் அம்மாற்றம் ஆன்றோர் மேற்கொண்டொழுகும் மரபினால் அறியத்தக்கது எவ்விடத்தும் நூல்விதியை மட்டுமே துணை கொள்ளுதல் தக்கதன்று என்றும் ஆன்றோர் மரபும் அறிந்தே நூல் விதியைக்கொள்ள வேண்டும் என்றும் அறிக.

***லௌகிகன் 2:*** (கல்வியறிவற்றவன்) அவையிலிருப்போரே! நீவிர் அனைவீரும் சற்று அமைதியாய் இரும். நான் ஒன்று சொல்கிறேன். இவர் ஊன் உண்டலை விடவேண்டும்; நான் விட்டுவிட்டேன் என்று சொல்கிறாரே! இவர் உடம்பில் இருப்பது என்ன? ஊனன்றோ? எலும்புக்கூடு மட்டுமாகவா இவர் இருக்கிறார்? ஊன், உதிரம் முதலியவற்றோடு கொழு கொழு வென்று இருக்கிறாரே! இங்ஙனம் இருக்கும் இவர் ஊன் உண்டலை விட்டேன் என்பதும் அதற்கு நூல்களிலிருந்து விதி காட்டுவதும் எவ்வளவு பெரிய வேடிக்கையாக இருக்கிறது. இவர் கூறுவன அனைத்தும் பொய்; இவரை நம்பிக்கெட்டுப் போகாதீர்! நம் வீட்டில் மண் சுவர் வைக்கிறோம்; அது இடிந்து விழுந்தால் என்ன செய்கிறோம்? மீண்டும் மண் சேர்த்துத்தானே அதைக் கட்டுகிறோம்; அதுபோல ஊனாலாகிய இந்த உடம்பு வளர்வதற்கும் வலிமையுடன் இருப்பதற்கும் ஊன் உண்ணல் வேண்டும்; அதுதான் பொருத்தம்; இவர் சொல்லும் நூல் விதிகளைக் குப்பையில் போடுங்கள். நான் சொல்வதைக் கேட்டு எவன்ஊன் உண்கிறானோ அவ்னே அறிவுடையவனாய்ப் பிழைத்துக் கொள்வான்.

***சைவா:*** ஆ! ஆ! உன்னுடைய சொல் எவ்வளவு நன்றாக இருக்கிறது. உன் அறிவுச் சுடரைக் கண்டு வியப்படைகிறேன். உடம்பு ஊன் உடைய தாய் இருப்பதன்றால் ஊன் உண்டல் வேண்டும் என்று சொல்கிறாய்? அப்படியே கொள்வோம். உன் உடம்பில் ஊன் மட்டுமா இருக்கிறது? வயிற்றில் மலமும் இருக்கிறதே. வயிற்றில் மலம் இருக்கிறது என்பதற்காக நீ பிறர் மலத்தை உண்ண வேண்டுமே! அங்ஙனம் செய்கின்றாயா? மாறாக மலங்கழித்த பொழுது மிகவும் அருவருப்படைந்து உடனே தூய்மை செய்கிறாயே! இதை அருவருக்கும் நீ ஊனையும் அருவருத்தல் வேண்டும். ஊனை அருவருத்தலில்லை எனில் இதனையும் அருவருத்தல் கூடாது.

***வைதி 3:*** இவன் மனிதராய்ப் பிறந்தோரனை வரும் ஊன் உண்ண வேண்டும் என்று அறிவில்லாமற் சொல்கிறான். உலகத்திலே தலைமுறை தலைமுறையாக ஊன் உண்ணாத இனத்தினர் என்று சிலரும், ஊன் உண்ணும் இனத்தினர் என்று சிலரும் இருக்கின்றனர். இவர் தத்தம் இனப்பழக்கத்தை மாற்றிக் கொள்வது தவறு. அதனால் உண்ணும் இனத்தினர் உண்டால் பாவமில்லை; விட்டால்தான் பாவம். உண்ணாத இனத்தினர் உண்டால் பாவம் என்பதே பொருத்தம்.

***சைவா:*** ஊன் உண்ணாத இனம் உண்ணல் பாவம் என்று நீ சொல்வது பொருத்தமே. உண்ணும் இனமும் அறிவு தெளிந்து உண்ணுதலை விட்டால் அதுவும் புண்ணியமாகுமேயன்றிப் பாவமாகாது. இது நிற்க, உண்ணும் இனம், உண்ணாத இனம் என்று நீ மனிதருக்குள் சிலரை வகுத்துக் கூறுவது தவறு. உண்மையில் மனிதராய்ப் பிறந்தோரனைவரும் கல்வி கேள்வியுடையராய் வேதாகமங்களை உணர்ந்து வீடு பெறுவதற்குரியராகலின் அவர் அனைவரும் ஊன் உண்ணாத இனமே. உண்ணும் இனம் பேய், நாய், நரி, ஈ, எறும்பு முதலியனவே. இவை ஒரு பிணம் அழுகிக் கிடக்கக் கண்டால் அருவருப்பின்றிச் சூழ்ந்து மொய்த்துத் தின்னும். இவற்றிற்குக் கல்வி கேள்வியறிவும் இல்லை. இவற்றுள்ளும் சில சிறப்புக் குணம் உடையவாய் ஊன் உண்டலைத் துறந்து நன்னிலையடைந்தன எனப் புராணங்கள் கூறும். ஒரு புலி பசுவினுடைய அறவுரை கேட்டுக்கொல்லா நோன்பு பூண்டு முற்பிறப் புணர்ந்துயோக நெறியில் நின்று வீடு பெற்றது. நாரை ஒன்று கொல்லா நோன்பு உடையதாய் ஞானம் பெற்று மதுரையை அடைந்து சிவ சாரூபம் பெற்றது. ஓர் ஆண் புறா தனது பேட்டினைக் கொன்ற வேடனது பசிக்கு இரங்கித் தானும் நெருப்பில் வீழ்ந்திறந்து அவனுக்கு உணவாய்ப்பின் மேலுலகம் அடைந்தது. அகத்தியர் முதலிய முனிவரின் ஆசிரமத்தில் தங்கியிருந்த பறவைகளும் விலங்குகளும் ஞான நெறியுணர்ந்து அருளுடையனவாய் விளங்கின. இப்படிப் பல நிகழ்ச்சிகள் புராணங்களால் அறியப்படுகின்றன. ஆதலின் நீ உன்னை ஊன் உண்ணும் இனத்தினனாய்ப் பிறழ உணர்ந்து பாவங்களுள் தலையாய கொலைப் பாவத்தைச் செய்து பாழான நரகடைய முற்படுவது தவறு.

***வைதி4:*** மனிதருள் சிலரை ஊன் உண்ணும் இனம் என்றும் சிலரை உண்ணாத இனம் என்றும் இவன் பிரித்துச் சொன்னது தவறு. இனத்தில் என்ன பெருமை

இருக்கிறது? நமக்கு முன்னே இருந்தவர் அறிவில்லாமல் ஒரு செயலும் செய்திருக்க மாட்டார். நாம் நம் முன்னோரைக் காட்டிலும் பெரிதாய் அறிந்ததும் இல்லை. ஆதலின் நம் முன்னோராய தாய் தந்தையர் எப்படி நடந்தனரோ அப்படி நாமும் நடப்பதே முறை. பெற்றோர் ஊன் உண்டனராயின் பிள்ளைகளும் ஊன் உண்ணலாம். அதில் பாவமில்லை, பெற்றோர் உண்ணவில்லையாயின் பிள்ளைகள் உண்பது பாவம்.

***சைவா:*** தாய் தந்தையர் நடந்த முறையில் பிள்ளைகள் நடக்க வேண்டும் என்று நீ சொல்வதும் தவறு. தாய் தந்தையர் முன்னே அறியாமையினால் உலகம் பழிக்கத் தக்க ஒரு செயலைச் செய்திருப்பின் அவர் வழியில் வந்தோர் அறிவுடையராயிருந்தும் பெற்றோர் செய்தனர் என்பதற்காக அவ்விழி செயலைச் செய்கின்றனரா? நம்முடைய தந்தையானாலும் அறிவில்லாமல் இழிசெயலைச் செய்தால் அவர் செயலை நாமும் மேற்கொள்ளக் கூடாது. அவர் நமக்குத் தந்தையும் ஆகார். நமக்கு அயலவரானாலும் வேத ஆகமங்களை உணர்ந்து நன்னெறியில் ஒழுகுபவராயின் அவர் செயலையே நாம் மேற்கொண்டு ஒழுக வேண்டும். அவரே நமக்குத் தந்தையாவார்.

***வௌகீ 5:*** இவன் தாய் தந்தையர் நடந்த முறையில் நடக்க வேண்டும் என்று சொல்வதும் பிழை. தாய் தந்தையர் பிச்சை எடுத்துண்டால் நாமும் பிச்சை எடுத்துண்ண வேண்டுமா? எவன் ஒருவன் பிறவிக் குணமாய் ஊன் உண்ணாமல் இருக்கின்றானோ அவனுக்கு ஊன் விலக்கு. சிலகாலம் உண்டவன் இடையில் அதனை விடுவதால் பயனில்லை. அப்படியே விட்டாலும் முன்தின்ற கையும் வாயும் வயிறும் எங்கே போகின்றன? அவற்றை விடுகிறோமா? அவற்றை விடாத பொழுது ஊனை விட்டதனால் என்ன பயன்? ஆதலின் சிலகாலம் உண்டவன் தொடர்ந்து உண்ணலாம்; அதனால் பாவமில்லை.

***சைவா:*** சிலகாலம் உண்டவன் தொடர்ந்து உண்ணலாம் என்பது தவறு. ஊன் உண்டல் தவறு என்னும் அறிவு எப்பொழுது தோன்றுகிறதோ அப்பொழுதே விடுவது பொருத்தம். அறியாத காலத்தில் செய்த பிழையை அறிவு தெளிந்த பின்னும் முன் செய்ததுதானே என்று செய்வாருண்டோ? நீ குழந்தையாய் இருந்த காலத்தில் மல மூத்திரங்களில் அளைந்து கிடந்திருப்பாய்; வயது வந்த காலத்தில் அதனை உனக்கு ஒருவர் எடுத்துக் கூறினால் 'அறியாப் பருவத்திற் செய்ததனை இப்பொழுது

சொல்லிக் காட்டலாமா' என்று அவர்மேல் சினந்து கொள்கிறாயேயன்றிச் சிலகாலம் மல மூத்திரங்களில் அளைந்து கிடந்தோமே; அதனை இப்பொழுது விடுவதனால் என்ன பயன்? என்று மீண்டும் அவற்றில் அளைந்து கிடப்பாயா? ஒருவன் தனக்குப் பைத்தியம் பிடித்த காலத்தில் பலவாறு திரிகிறான். அதற்காக அறிவு தெளிந்த பின்னரும் அவ்வாறு திரிய வேண்டுமா? நாம் குழந்தைப் பருவத்தராய் இருந்த பொழுது மறையுறுப்புகளைப் பலரும் காணுமாறு ஆடையின்றித் திரிந்தோம். அதற்காகப் பெரியவரான காலத்தும் இவ்வுறுப்புக்கள் முன் எல்லோராலும் அறியப்பட்டவைதாமே; மறைக்க வேண்டுவதேன் என்று ஆடையின்றித் திரிகிறோமா?

***வௌகீ 6:*** சிலகாலம் ஊன் உண்டவன் பின்னர் விடுவது பாவம் என்று இவன் சொல்வதும்பிழை. ஊன் உண்டலை எப்பொழுது வேண்டுமானாலும் விடலாம். ஆனால் ஒன்று. ஊன் உண்டலை சிறிது காலம் விட்டுப் பார்க்க வேண்டும். எவன் உடம்புக்கு ஒத்துக் கொள்ளுகிறதோ அவன் அப்பொழுது முதல் அறவே விட்டு விடலாம். எவன் உடம்புக்கு ஒத்துக் கொள்ளவில்லையோ அவன் தொடர்ந்து உண்ண வேண்டும். விடக்கூடாது; விடுவது பாவம்; ஏனெனில் ஆன்மா ஊன் உண்டலை விரும்பாத பொழுதுதான் ஊன் உணவு நீக்குவது உடம்புக்கு ஒத்துக்கொள்ளும். அதனை விரும்புமாயின் ஒத்துக் கொள்ளாது. ஆன்மா விரும்புகிற பொழுது நாம் அதனை வலிந்து தடுக்கலாமா? ஆன்ம இச்சையை அடக்குவது பெரும் பாவமன்றோ!

***சைவா:*** ஆன்ம இச்சையை அடக்குவது பாவம்; ஆன்மா விரும்புமாயின் ஊன் உண்ணலாம் என்று நீ கூறுகிறாய்; நாம் எல்லா இடங்களிலும் ஆன்மா விரும்பும் வழியிலேயே நடந்து கொள்கிறோமா? அங்ஙனம் நடக்க முடியுமா! நடப்பது பொருந்துமா? உலகில் சில ஆண்களுக்கும் பெண்களுக்கும் தாய் தந்தை, தங்கை தம்பி, தமக்கை அண்ணன்; மகள் மகன் ஆகியோரது இயற்கை அழகு, செயற்கையழகு முதலாயின கண்டபொழுது உள்ளத்தில் காம விகாரம் தோன்றுகிறது. அப்பொழுது அவர்கள் முறையற்ற இவர்களைத் தோய்வதனால் இன்பம் இல்லாமலா போகும்? நம் ஆன்ம இச்சையை வலிதின் அடக்குதல் பாவமன்றோ? என்று கருதி அவருடன் இன்பந் துய்க்கின்றனரா? இல்லையே;

அதற்கு மாறாக இது பெரும் பாவம்; ஊரவர் கேட்டால் நகையாகும் என்று அஞ்சி அடங்கியன்றோ நடக்கின்றனர். அப்படியே சிலர் கழி காமம் காரணமாக முறையற்றவரைக் கூடுவாராயின் அவரை நாம் மனிதராக மதிப்பதில்லையே! எனவே ஆன்ம இச்சையை அடக்குவது பாவமன்று; நல்லது தீயது ஆராய்ந்தறிந்து தீயதன்மேல் விருப்பம் சென்றாலும் அஞ்சி அடங்கி ஒழுகுவதே தக்கது என அறிக;

(இவ்வளவில் வாதிகளுக்கு வேறு வினாவுதற்கு ஒன்றும் இல்லை. அவையினர் அலையற்ற கடல் போன்றும் ஓவியம் போன்றும் அமைதியாகவும் காற்றால் அலைக்கப் படாத விளக்குப்போல் கொல்லாமை, புலாலுண்ணாமை என்பவற்றைப் பற்றி நிலைத்து விளங்கும் அறிவுடையராயும் இருக்கின்றனர். அப்பொழுது அந்தப் பக்குவமுடைய மாணவன் எழுந்து மீண்டும் வினவுகின்றான்.)

***மாணவன்:*** பெரியீர்! நீயிர் அருளிச் செய்த படியே யான் இன்று தொடங்கிக் கொலையையும் புலாலுண்டலையும் தவிர்க்கின்றேன். இப்பாவங்களிலிருந்து விடுபட்டயான் என்னையறியாமல் நிகழும் கொலைப் பாவங்களினின்று எங்ஙனம் விடுபடுவது என்பது அறியேன். அதற்கும் ஒரு வழியுரைத்தருள வேண்டுகிறேன்.

***சைவா:*** நீ ஞானாசாரியனுடைய திருவடியை முறைப்படி வழிபாடுசெய் அவ்வழிபாட்டின் ஆற்றலால் நீ அறியாமல் செய்த பாவங்களெல்லாம் அகலும்.

***மாணவன்:*** பெரியீர்! என் மனைவி மக்களுக்கும் இந்நெறியை எடுத்து மொழிவேன். அவர் ஏற்று ஒழுகாவிடினும் யான் இந்நெறியில் தவறாது ஒழுகுவேன்.

***சைவா:*** நீ மட்டும் தவறாது ஒழுகினால் அமையாது. மனைவி மக்களையும் இந்நெறியில் ஒழுகச் செய்ய வேண்டும்; இல்லையேல் அவர் செய்யும் பாவம் உன்னையும் சேரும்;

***மாணவன்:*** அவர்வேறு; யான் வேறன்றோ? அவர்க்கும் எனக்கும் உடம்பும், ஊண், உறக்கம் முதலியனவும் வேறாய் இருக்கின்றனவே; அவர் செய்யும் தீவினைப் பயன் எனக்கும் ஆதல் எங்ஙனம்?

***சைவா:*** உடல், உணவு, உறக்கம் முதலியவற்றால் நீயும் அவரும் வேறு வேறானவராயிருந்தாலும் அவர் செய்யும் நல்ல தீய செயல்களுக்கு நீயே தலைவனாய் முன் நிற்கின்றாய். உன் மனைவி பிறனுடன் கூடியிருக்கக் காணின் அவளை விட்டு நீங்க வேண்டும் என்னும் நூல் விதியையும் நினையாது 'யான்

இருக்க இவள் இங்ஙனம் தீநெறியொழுகலாமா? இவளைக் கொல்வேன்' எனச் சினந்தெழுகின்றாயாதலின் அவர்க்கு நீ தலைவன் என்பதும் அவரை நன்னெறியில் ஒழுகச் செய்தல் உன்கடமை என்பதும் விளங்கும். இதனால் அவர் செய்யும் தீவினைப் பயன் உனக்கும் ஆம் என அறிக.

***மாணவன்:*** நீயிர் அருளியபடியே என் மனைவி மக்கள் ஊன் உண்பதையும் தடை செய்வேன். அவர் என் ஆணை வழி நில்லாவிடின் அவரை விட்டு நீங்கியேனும் இந்நெறியில் யான் தவறாது ஒழுகுவேன்.

***சைவா;*** உன் மனைவி மக்கள் புலாலுண்ணலைத் தடுப்பதுபோல் ஏனைச் சுற்றத்தார் உண்ணலையும் தடுக்க வேண்டும். இல்லையெனின் அவரைவிட்டு நீங்க வேண்டும்.

***மாணவன்:*** சுற்றத்தார் என் மனைவி மக்களைப்போல் என தாணைக்குட்பட்ட வரல்லரே; அவரை விட்டு நீங்க வேண்டியது ஏன்? அவர் செய்யும் பாவம் எனக்கும் ஆம் என்பது எங்ஙனம்?

***சைவா:*** சுற்றத்தார் உன்னின் வேறானவர் என்று கூறுகிறாய். அப்படியானால் அவர் உன் குலத்துக்கும் குணத்துக்கும் மாறாய் ஒழுகுவாராயின் அவரை விட்டு நீங்குவது ஏன்? அவர் வீட்டில் உணவு முதலியன கொள்ளாதொழிவதேன்? உன்மனைவி மக்களையும் அவருடன் தொடர்பு கொள்ளவிடாமல் தடுப்பதேன்? அவரொடு தொடர்பு கொள்ளும் உன் சுற்றத்தினர் பிறரையும் நீ விட்டு நீங்குவதேன்? அதனால் நீ அவரின்வேறல்லை என அறிக. இச்சிறு முரண்பாட்டுக்கே பெரிதாய்ச் சினந்து நீங்கும் நீ, மறுமையில் நரகம் பயக்கும் கொலைப் பாவம் உன்னைச் சூழும்படி ஒழுகும்போது அவரை விட்டு நீங்காமல் தொடர்பு கொள்ளலாமோ? யாரேயாயினும் கொலைப் பாவத்திற்குஅஞ்சாதாராயின் அவரை விட்டு நீங்க வேண்டும்; கொல்லா நோன்புடையராயின் அவருடன் நட்புக்கொள்ளல் வேண்டும் என்பதைக் கடைப்பிடித்தொழுகுக.

***மாணவன்:*** தேவரீர் அருளியபடியே இன்று முதல் மனைவி மக்களுடன் கொல்லா நோன்பு மேற்கொள்வேன். நிலையுயிர்ப் பொருளாலாகிய உணவுகளையே உண்பேன். அவற்றையும் குரு முதலியவர்க்கு முன் படைத்தே

உண்பேன். புலாலுண்போரை நீங்குவேன். கொல்லா நோன்புடையோரை நட்புக்கொள்வேன்.

**சைவர்:** நிலையுயிர்ப் பொருளாலாகிய உணவுகளுள்ளும் எல்லாம் உண்பதற்காகா. சில விலக்கத்தக்கன. அவை: கொம்மட்டிக்காய், உள்ளி, வெள்ளுள்ளி முதலியன.

**மாணவன்:** அவற்றில் என்ன குற்றம்; ஏன் விலக்கவேண்டும்.

**சைவர்:** அவை ஊனுக்கு ஒப்பாம். அதனால் விலக்க வேண்டும்; மற்றும் சில உரைகள் உனக்கு முடிவாக உரைக்கின்றோம். கேட்பாயாக.

நாய் பொற்சங்கிலியால் கட்டி நல்ல உணவுகளை இட்டாலும் அப்பொழுது மட்டுமே திருந்தி ஒழுகும். கட்டு அவிழ்த்த பின்னரோ முன்னைப் பழக்கம்போல் மலம், தோல், எலும்பு முதலியவற்றையே தேடித்திரியும். தன்னருகில் வருபவரைக் கண்டு உறுமும். அதுபோல உலகாயதன் முதலியோர் இப்பொழுது சொல்வதையெல்லாம் கேட்டு மனம் திருந்தியவர் போலிருந்து இங்கிருந்து நீங்கிச் சென்றவுடன் மீண்டும் கொலைப் பாவமே செய்து திரிவர். நன்னெறி கூறுவாரைக் காணினும் வெறுப்பர். நீ அவரைப் போலாகாதே. பாவச் செயலைக் கேட்ட அளவிலேயே அஞ்சி அடங்கி ஒழுகுவாயாக. மேலும் சில கேட்பாயாக.

பல பிறவிகளிலும் செய்த தவத்தின் பயனாய் வந்த இவ்வுடம்பு நீர்க்குமிழிபோல் விரைவில் அழியக் கூடியது. ஆதலின் இது இருக்கும் பொழுதே செய்ய வேண்டிய அறங்களைச் செய்து முடித்துக்கொள். இவ்வுடம்புக்கு வேண்டிய இன்பங்களையே முயன்று செய்துவாணாளை வீணாளாக்காதே. எச்செயலையும் உன்சுதந்திரத்தாற் செய்யாதே. ஏனெனில் நீ பாவம் என நினைத்து நீங்கும் செயல் புண்ணியமாகவும் புண்ணியம் என நினைத்துச் செய்யும் செயல் பாவமாகவும் இருக்கும். ஆதலின் அருள் நெறியுணர்ந்தோரும் கொலை முதலிய பாவங்கள் செய்யாதோரும் ஆகிய சிவஞானியரின் கூட்டத்தைச் சேர். அவரைப் பத்தியுடன் வழிபடுக. அவருரைத்தருளும் நெறியில் நின்று தீவினை நீங்கி நல்வினை செய்க; இங்ஙனம் ஒழுகின் மனமாசு நீங்கும். படிப்படியாய்ச் சிவஞானம் உண்டாகும். அதனால் முத்தி அடையலாம்.

முற்றும்.



# நமது ஆதீன வெளியீடுகள்

| நூல் | | விலை |
|---|---|---|
| 1. வைராக்கிய சதகம் | – | ரூ 35.00 |
| 2. வைராக்கிய தீபம் | – | ரூ 15.00 |
| 3. அவிரோத உந்தியார் | – | ரூ 45.00 |
| 4. கொலை மறுத்தல் | – | ரூ 30.00 |
| 5. எங்கள் நாட்டுப்புறம் | – | ரூ 25.00 |
| 6. கோவைகிழாரின் சமயநோக்கு | – | ரூ 10.00 |
| 7. கணிப்பொறி கற்க | – | ரூ 40.00 |
| 8. ஞான அம்மானையும் அகவல்களும் | – | ரூ 20.00 |
| 9. நாளும் சிவநெறி | – | ரூ 50.00 |
| 10. நியாயக்களஞ்சியம் | – | ரூ 125.00 |
| 11. பெருங்கதை ஆய்வு மாலை | – | ரூ 500.00 |
| 12. புறப்பாட்டுரை | – | ரூ 25.00 |
| 13. கொங்கு நாட்டு வரலாறு | – | ரூ 150.00 |
| 14. கோயிலும் தமிழும் | – | ரூ 40.00 |
| 15. கொங்குநாடும் சமணமும் | – | ரூ 60.00 |
| 16. தமிழாகமத் திருக்குட நன்னீராட்டு | – | ரூ 75.00 |
| 17. சிவஞானபோதத் திருநெறியவுரை | – | ரூ. 50.00 |
| 18. திருவிளக்குவழிபாடு | – | ரூ. 20.00 |
| 19. சாந்தலிங்கரின் மெய்யியல் கோட்பாடுகள் | – | ரூ. 60.00 |
| 20. நால்வர்களும் கல்வெட்டுக்களும் | – | ரூ. 40.00 |
| 21. சிறுவர் சிவஞானம் | – | ரூ. 25.00 |